# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—57 | டிசம்பர் 1977 | இதழ்—12 |
| --- | --- | --- |

## பொருளடக்கம்

பக்கம்





சந்தா எண் 1001 முதல் 1530 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை முடிவடைய இருக்கிறது. அன்பர்கள் சந்தாவை உடனடியாகச் செலுத்தி புதுப்பித்துக்கொள்ள வேண்டுகிறோம்.

—ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்.

# சந்தாதார்கள் கவனிக்க

**சந்தா எண் 1001 முதல் 1530 வரையிலும் உள்ள பெரும்பாலான சந்தாதாரர்களின் சந்தாத் தொகை டிசம்பர் 1977 இதழுடன் முடிவடைகிறது.** இவர்களில் ஒரு சிலருடைய சந்தாத் தொகை ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் முடிவடைய இருக்கிறது.

மேலே குறிப்பிட்டுள்ள எண்களுக்கிடையில் உள்ள சிலர், ஏற்கனவே சந்தாவை அனுப்பிப் புதுப்பித்துக் கொண்டிருக்கிறார்கள். அவ்விதம் புதுப் பித்துக் கொள்ளாமல் டிசம்பர் இதழோடு சந்தா முடிவு பெறும் நிலையில் இருப்பவர்கள், மேற்கொண்டு பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப அடுத்த ஆண்டுச் சந்தா தொகை ரூ. 7-யை டிசம்பர் மாதம் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் சந்தா முடிய இருக்கும் அன்பர்களை யும் விரைவில் சந்தாவை அனுப்பக் கோருகிறோம்.

சந்தாதாரர்கள் மணியார்டர் அனுப்பும்போது, அவர்களுடைய சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் மணியார்டர் பாரத்தில் தவறாமல் குறிப்பிடும்படியாகக் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

பெரும்பாலும் நமது பத்திரிகையின் எல்லாச் சந்தாதாரர்களுமே, சந்தாவைப் புதுப்பித்துக் கொள்பவர்களே ஆவர். சந்தாவைக் கூடிய விரை வில் முன்னதாகவே செலுத்துவதால் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

மேற்கொண்டு சந்தாவைத் தொடர இயலாதவர்கள், அல்லது உரிய காலத்திற்குள் சந்தாவை செலுத்த இயலாதவர்கள்—முன்னதாக ஒரு கார்டு எழுதித் தகவல் தெரிவிப்பது எங்களுக்குப் பெரிதும் உதவிகரமாக இருக்கும்.

முன்னதாகத் தகவல் இல்லாத நிலையில் சந்தா தாமதமாகச் செலுத்தப்பட்டால், பிரதிகள் கைவசம் இல்லையானால், அதற்கடுத்த மாதம் முதல் பிரதியை அனுப்ப ஏற்பாடு செய்யப்படும்.

ஒவ்வொரு மாதத்தின் தேவையைக் கணக்கிட்டுப் பிரதிகளை அச்சடிக் கிறோம். காலதாமதமாகச் செலுத்தும் பலருக்கும் அவர்கள் விரும்பிக் கேட் கும் இதழ் முதற்கொண்டு பிரதிகளை அனுப்ப இயலாமல் போய்விடுகிறது. 1977-ஆம் ஆண்டில் இந்த அனுபவம் பலமுறை எங்களுக்கு ஏற்பட்டது.

சந்தா எண் 1001 முதல் 1530 வரையில் உள்ள சந்தாதாரர்களின் சந்தாத் தொகை விரைவில் முடிவடைய இருக்கிறது. அன்பர்களை, ஆவன செய்து ஒத்துழைப்பு நல்கும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

தர்மத்தின் தொண்டில் தங்களின் அன்பிற்குரிய

**நிர்வாகி**

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்.

---

தூய அன்னையார் ஸ்ரீ சாரதாதேவியாரின் 125-ஆவது ஜயந்தி, 1978 ஜனவரி 1-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை வழக்கம்போல் விமரிசையாக சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் நடைபெறும்.




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

— திருமூலர்

தொகுதி 57 | பிங்கள ஹூ மார்கழி மீ | இதழ் 12




अकारादिक्षकारान्तवर्णावयवशालिनी ।
वीणापुस्तकहस्ताऽव्यात्प्रणो देवी सरस्वती ।

— श्री त्रिपुरसुन्दरी वेदपादस्तोत्रम्

அகாராதி க்ஷகாராந்தவர்ணு வயவசாலினீ ।
வீணு புஸ்தகஹஸ்தா ऽவ்யாத்ப்ரணோ தேவீ ஸரஸ்வதீ ॥

—ஸ்ரீ த்ரிபுரஸுந்தரி வேதபாதஸ்தோத்ரம்

அகரம் முதல் க்ஷகரம் வரையிலுள்ள எழுத்துகளை உடலுறுப்புகளாயுடையவளாயும், வீணை, புத்தகம், இவற்றைக் கையில் தரித்தவளாயுமுள்ள பராசக்தி வடிவமான ஸரஸ்வதிதேவி எங்களைக் காப்பாற்றட்டும்.

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

—ஆண்டாள்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

கடவுள் ஒருவர் மட்டும்தான் உண்மையிலேயே உனக்குச் சொந்தமானவர்; உனக்கு எல்லாமும் அவர்தான். அவரை எப்படி அடைவது என்ற ஒரு விஷயத்திலேயே நீ கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும்.

காந்த ஊசி எப்போதும் வடக்குத் திசையையே காட்டும். அதன் காரணமாக, கடலில் செல்லும் கப்பல்கள் திசை தவறிப் போவதில்லை. மனிதனுடைய மனம் பகவானை நாடியிருக்கும் வரையிலும், அவன் உலக வாழ்க்கையாகிய சமுத்திரத்தில் திசை தப்பிப் போக மாட்டான்.

ஒருவர் மிகவும் சிரமப்பட்டு விறகும் பிறவும் தேடி நெருப்பு உண்டாக்குகிறார். அதன் உதவியால் பலர் குளிர் காய்கின்றனர். அதேபோல, மிகவும் சிரமப்பட்டுத் தவம் செய்து பகவானை அடைந்த மகான்களோடு பழகுவதால், பலர் பகவானிடத்தில் சுலபமாக மனதை வைக்க முடிகிறது.

அழுக்கடைந்த கண்ணாடியில் சூரிய ஒளிக்கதிர் பிரதிபலிப்பதில்லை. அதுபோல, மாயைக் குட்பட்ட அசுத்தாத்மாக்களின் இதயத்தில் ஈசுவர தேஜஸ் தோன்றுவதில்லை. ஆனால், சுத்தமான கண்ணாடியில் சூரியன் பிரதி பலிப்பதைப் போல, தூய்மையான உள்ளங்களில் இறைவன் தோன்றுகிறான். ஆதலால் தூய்மையானவனாக இரு.

உன்னுடைய மனம் சதாசர்வ காலமும் பகவானிடம் நிலைபெற்று இருக்க வேண்டும். ஒரு கையால் உனது உலகக் கடமைகளைச் செய்துகொண்டே, மற்றொரு கையால் ஈசுவரனுடைய பாதாரவிந்தங்களைத் தொட்டுக்கொண்டிரு. நீ உலகில் செய்ய வேண்டிய காரியம் ஒன்றும் இல்லாத சமயத்தில், அவனுடைய தாமரைத் திருவடிகளை இரண்டு கைகளாலும் சேரப்பிடித்து உன் மார்போடு அணைத்துக்கொள்.

முதலைகளுக்குத் தண்ணீரின் மேலே மிதந்து நீந்த வேண்டுமென்பது ஆசை. ஆனால், அவைகள் மேலே வந்ததும் வேட்டைக்காரர்கள் அவைகளைக் குறி வைத்துச் சுடுகிறார்கள். ஆதலால், ஆசை இருந்தாலும் முதலைகள் மேலே கிளம்ப முடியாதபடி தண்ணீருக்குள்ளேயே மூழ்கி இருக்க வேண்டியிருக்கிறது. என்றாலும், வேட்டைக்காரர்களால் ஆபத்து நேராத தகுந்த சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் 'விர்' என்று சப்தமிட்டுக்கொண்டு அவைகள் மேலே கிளம்பிப் பரந்த நீர்ப்பரப்பில் ஆனந்தமாக நீந்துகின்றன. உலக வாழ்க்கையில் அகப்பட்டுழலும் மனிதனே! உனக்கும் ஆண்டவனாகிய கடலின் மேலேயே நீந்த வேண்டுமென்பது ஆசைதான். ஆனால், உனது குடும்பத் தொல்லைகளும் காரியங்களும் உனக்கு இடையூறாக இருந்து தடுக்கின்றன. இருந்தாலும் தைரியமாக இரு. எப்போதெல்லாம் உனக்கு ஒய்வு கிடைக்கிறதோ, அப்போதெல்லாம் தீவிரமான பக்தியுடன் பகவானை நினை; அவரிடம் மனப்பூர்வமாகப் பிரார்த்தனை செய். உன்னுடைய எல்லாத் துன்பங்களையும் துயரங்களையும் அவரிடம் சொல். நாளடைவில் அவர் உனக்குக் கட்டாயம் முக்தியைத் தந்து, தெய்வீக ஆனந்தக் கடலின் மேலே மிக இன்பமாக நீந்திக் கொண்டிருக்கத் திருவருள் செய்வார்.



ஓம்




## சில சங்கல்பங்கள்

ஒவ்வொருவரிடமும் தெய்வீக உணர்வுகள் இருக்கவே செய்கின்றன. சிலரிடம் அவை ஒளி விட்டுப் பிரகாசிக்கின்றன. பலரிடம் அவை இருப்பதே தெரியாத வகையில் இருள் மண்டிக் கிடக்கிறது. இந்த இருளை விலக்கும் வழிகளாகத் தான், எல்லா மதங்களும் போதனைகள் பல வற்றையும் மனிதகுலத்துக்கு உபதேசித்து வரு கின்றன. அந்தப் போதனை முறைகளில் சங்கல் பங்களும் அடங்கும்.

சிந்தனை, சொல், செயல் ஆகியவைகள் ஆன் மீக முன்னேற்றத்துக்குத் துணைபுரியும் வகை யிலே, சில வகையான சங்கல்பங்களைத் தெரிந் தும் தெரியாமலும் நாம் கடைபிடித்து வரு கிறோம்.

மத வாழ்க்கையில் உண்மையிலேயே ஈடுபடு பவர்கள் அனைவருமே, ஏதோ ஒரு வகையில் சங்கல்பங்களை மேற்கொண்டு, அதற்கு இயந்த வாழ்க்கையை வாழ முயலுகிறார்கள்.

'நாள் ஒன்றுக்குப் பத்தாயிரம் முறை ஜபம் செய்வேன்' என்று சங்கல்பித்து அதற்கு இயைய வாழலாம். சிலர் சுவாமிக்கு 'நேர்ந்து' கொள் கிறார்கள். சபரிமலைக்குச் சென்று ஐயப்பனை வழிபட விரும்புபவர்கள், குறிப்பிட்ட காலம் வரையிலும் சில விரதங்களை அனுஷ்டிக்கிறார் கள். பிரம்மசரியம், சன்னியாசம் ஆகிய வாழ்க்கை முறைகளை மேற்கொள்ளும்போது, சில விரதங்களை அனுஷ்டிப்பதாக சங்கல்பங் களை ஏற்கும் வழக்கம் எல்லாக் காலங்களிலும் இருந்து வருகிறது.

இந்துக்கள், ஏகாதசி விரதம் போன்ற பல விரதங்களை அனுஷ்டிக்கிறார்கள். இஸ்லாமியர் களும் கிறிஸ்தவர்களும், மற்றும் பல மதத் தவர்களும், தத்தம் மத முறைகளைப் பின்பற்றி பலவித விரதங்களையும் சங்கல்பங்களையும் கடைப்பிடிக்கிறார்கள். இவைகளை அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடிக்கும் அளவுக்கு, ஆன்ம லாபம் கிட்டும் என்பதில் ஐயத்திற்கே இடமில்லை.

சதா சர்வகாலமும் இலௌகிகத்தில் அலை பாயும் மனம், சில விரதங்களை உறுதியுடன் மேற்கொள்ளும்போது அடங்கி வருவதை அனுபவ வாழ்க்கையில் காணலாம். பழக்க வழக்கங்களால் உந்தப்பட்டு சிதறி ஓடும் மனம், சங்கல்பங்களால் சிறிது சிறிதாகப் பண்பட்டு தெய்வத்திடம் நிலைக்கும்.

ஆண்டவனை நோக்கிச் செலுத்தப்படும் சில வகைப் பிரார்த்தனைகளும், குருவின் முன்னால் மேற்கொள்ளும் உறுதிமொழிகளும், சங்கல்பங் களாக அமைந்து சாதகர்களுக்குப் பெருமளவில் நற்பயனை விளைவித்து வருகின்றன.

எப்போதும் நடைமுறை வாழ்க்கையில் சிறந்த சங்கல்பங்களை ஏற்று, தலைசிறந்த சாத கர்கள் கண்ணும் கருத்துமாகப் பேணி வரு கிறார்கள். அந்த வகையில் பயன்படக் கூடிய சில சங்கல்பங்கள், சுவாமி பரமானந்தரின் கருத் தைத் தழுவி இந்த இதழில் கீழே தரப்படு கின்றன.

### சங்கல்பங்கள்

எல்லாம் வல்ல இறைவனின் அன்பு தெய் வீக மயமானது. அவருடைய அன்பும் அளப் பரும் ஆற்றலும், என்னை ஏதாவது ஒருவிதத் தில் தனக்குச் சொந்தமான ஒரு கால்வாயாக அமைத்துக் கொண்டு வெளிப்படுமாறு, இறை வனின் திருவருளை வேண்டிப் பிரார்த்தித்து இந்த நாளைத் துவங்குகிறேன்.

எப்படிப்பட்ட தடைகள் என் முன்னால்

தோன்றினாலும், நான் என்னுடைய சிந்தனை, சொல், செயல் என்னும் எல்லாவகையாலும் அந்தத் தடைகளை வெல்லுவதற்கு முழு மனதுடன் முயற்சி செய்வேன்—என்னும் சங்கல்பத்துடன் இறைவனின் திருவருளை வேண்டிப் பிரார்த்தித்து இந்த நாளைத் துவங்குகிறேன்.

எனது மனம், மொழி, மெய் ஆகிய முக்கரணங்களாலும் எந்த ஒரு உயிரையும் துன்புறுத்த மாட்டேன்—என்ற சங்கல்பத்துடன் இறைவனின் திருவருளை வேண்டிப் பிரார்த்தித்து இந்த நாளைத் துவங்குகிறேன்.

என்னுடைய எல்லாவிதமான எண்ணங்களும், வாக்கும், செய்கைகளும், ஆக்கபூர்வமான சிறந்த பணிகளாகவும், மற்றவர்களுக்கு நன்மையை விளைவித்துப் பயன் தரக்கூடியவைகளாகவும் விளங்கும் வகையில் நடந்து கொள்வதற்கு முயற்சி செய்வேன்—என்ற சங்கல்பத்துடன் இறைவனின் திருவருளை வேண்டிப் பிரார்த்தித்து இந்த நாளைத் துவங்குகிறேன்.

அருள் உடையவனும், அன்பு உடையவனும், சர்வக்ஞனும், சர்வ சக்திமானும், எல்லா உயிர்களிடத்திலும் கங்குகரையற்ற பாசத்தையும் கிருபையையும் உடையவனுகிய இறைவனின் ஓர் அம்சமாகவே என்னை நான் நினைத்துக் கொண்டு, இறைவனின் திருவருளை வேண்டிப் பிரார்த்தித்து இந்த நாளைத் துவங்குகிறேன்.

### சிந்தனைகள்

முதன் முதலாக என்னுடைய எண்ணங்களில் தெய்வீகம், தூய்மை, அன்பு இல்லாத அம்சங்களிலிருந்து என்னை நான் விடுவித்துக் கொள்வதற்கு, என்னால் அதிகபட்சம் இயன்ற வரை முயற்சி செய்வேன்.

என்னுடைய வாழ்க்கையும், எனது கடமைகளாக வாய்த்துள்ள பணிகளும், எவ்வளவு கடினமானவைகள் என்பதை உள்ளூர எனது அந்தரங்க இதயத்தில் நன்றாக உணர்ந்திருக்கிறேன். ஏனெனில் காலம், இடம் பலவித மனநிலைகளை உடைய மக்களுடன் பழக வேண்டிய நிலையில் இருத்தல்—ஆகிய காரணங்களால் எனது உள்ளத்தில் அன்பும் பண்பும் இல்லாத நினைவுகள் தூண்டப்படக்கூடும். என்றாலும், என்னுடைய தெய்வீகம் ததும்பும் உயர்ந்த கொள்கைகளை என்னுடைய முழு ஆற்றலுடன் பற்றிக் கொள்வேன். அதன்பொருட்டுப் பின் வரும் கருத்துக்களை அடிக்கடியும் எனக்கு நானே நினைவுபடுத்திக்கொண்டு, என்னுடைய கடவுள் தன்மையை உடைய இலட்சியங்களை எனது உள்ளத்தில் உறுதிபெற நிலைநிறுத்துதற்கு முயற்சி செய்வேன்.

பிறரிடம் அன்பு செலுத்துவது, வெறுத்து ஒதுக்குவதைவிட மேலானது. மற்றவர்களிடம் மரியாதையுடன் நடந்து கொள்வது, அவமரியாதை செய்வதைவிட மேலானது.

அன்பு அச்சத்தைக் காட்டிலும், கோபத்தைக்காட்டிலும், பொறுமையின்மையைக் காட்டிலும், மனத் தளர்ச்சி, உடல் நோய் ஆகியவைகளைக் காட்டிலும் மகிமை பொருந்திய தெய்வீகப் நிறைந்தது. அன்பு, மாட்சிமை உடையது. அன்பு எல்லாவிதமான உள்ளத்தின் குறைபாடுகளைக் காட்டிலும் சாலப் பெரிது.

ஆகவே, கடவுளின் முன்னால் உறுதியான உள்ளத்துடன், எனது இதயத்தில் அன்பைத் தவிர வேறு எந்தவிதமான எண்ணங்களோ, கற்பனைகளோ இல்லாமல் விலக்கி விடுவதற்காக உறுதி கொள்வேன்.

அதைரியமும், மனத்தளர்ச்சியும், ஈசுவரனிடம் நிலையாக நான் ஒன்றுபடுவதற்காக மேற்கொள்ளும் முயற்சியில் இடையூருக அமைவதற்கு இடம் கொடுக்கமாட்டேன்.

எந்தக் காரணத்தை முன்னிட்டாவது, கணப்பொழுது ஆணவம், சந்தேகம், மனச்சோர்வு ஆகியவைகளில் ஏதாவது என்னுடைய கடவுள் சாட்சாத்காரம் என்னும் இலட்சியத்தை மறைத்துவிடுமானுல், நான் மீண்டும் முழு நம்பிக்கையுடன் எனது இலட்சியத்தைத் துவங்கிப் பரம்பொருளாகிய இறைவனிடம் எனது உள்ளத்தைத் திருப்புவேன். அவரிடம் பணிவு நிறைந்த பிரார்த்தனையைச் செய்து, திரும்பவும் என்னை எனது இலட்சியத்தில் உறுதியுடன் நிலைத்திருக்கச் செய்யும்படி, மனம் கசிந்துருகி வேண்டிக்கொள்வேன்.

எனது இதயத்தின் ஒவ்வொரு மூலைமுடுக்குப் பகுதியிலும், வேறு எந்தவிதமான எண்ணங்களின் ஆட்சிக்கும் உட்படாமல், அன்பு என்னும் நினைவுகளால் உறுதியாக நிலைபெற்று இருக்கும்படி, எனது உள்ளத்திற்கு வலியுறுத்துவதே எனது தலையாய முதல் இலட்சியமாக இருக்கட்டும். இந்தச் செயலை முழுமனதோடும்,

சிரத்தையோடும், முழு உள்ளமும் ஒருமுகப் பட்ட பக்தியோடும், என்னுடைய நடைமுறை அன்றாட வாழ்க்கையில் எப்போதும் செய்து வருவேனாக.

இதன் பொருட்டு எனது மனம், மொழி, மெய் ஆகிய எல்லாவற்றையும் எல்லாக் காலங்களிலும் ஒருமுகப்படுத்தி ஒன்றாக இணைப்பதற்கு முயற்சி செய்து வருவேனாக. ஏனெனில், அவ்விதம் முழுமையாக எல்லாம் ஒத்துழைத்து இயங்காமல் போனால், என்னுடைய மகத்தான முயற்சி நிறைவேற இயலாமல் போய்விடும்.

தியான நேரத்தில், மௌனமாகவும் சாந்தியுடனும், மனம் உண்முகப்பட்ட நிலையில் எனது புலன்கள் யாவும் ஒருமுகப்பட்டு இயங்கும் நிலையில் இருப்பேன். அவ்விதம் நிலைபெற்ற அந்தக்கரணங்கள் ஒழுங்காகவும் உறுதியாகவும் இருந்தால்தான் ஆன்மீக வாழ்க்கையில் முன்னேற்றத்தைப் பெற முடியும்.

ஆகவே, எல்லா நலன்களையும் எனக்குக் கைகூடச் செய்யும் கருணாமூர்த்தியாகிய பகவான், எனது முன்னால் எப்போதும் இருந்து என்னைக் காத்து இரட்சிப்பாராக. எனக்கு நான் முக்கியத்துவம் கொடுத்துவிடாமலும், எனது செயல்களைக் குறித்து நான் கர்வம் கொண்டுவிடாமலும், எனது தலைவனாகிய இறைவன் என்னைக் காப்பாற்றி அருள் புரிவாராக. நான் இறைவனின் கையில் உள்ள ஒரு புல்லைப் போல, அவருடைய இச்சைக்கே முழு அளவில் உட்பட்டுத் தாழ்ந்தும் வளைந்தும் கொடுக்கக்கூடியவனாகவும், அவருடைய கையில் உள்ள பயன்படக்கூடிய ஒரு நல்ல கருவியாகவும் என்றென்றும் விளங்க இறைவன் அருள்பாலிப்பாராக.



## நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ்

நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் 1943ஆம் ஆண்டில் சிங்கப்பூரில் இருந்தபோது, இரவில் உணவுக்குப் பின், தம் காரை அனுப்பி ராமகிருஷ்ண மடத்து சுவாமிகளையும் பிரம்மசாரி கைலாசம் என்னும் துறவியையும் அழைத்துவரச் செய்வார். சுமார் இரண்டு மணி நேரம் அவர்களுடன் வேதாந்த விஷயங்களைப் பற்றிப் பேசுவார். பிறகு நள்ளிரவுக்கு மேல் இந்திய தேசிய இராணுவம், அரசாங்கம் முதலியவை சம்பந்தமான கடிதங்களையும் தஸ்தாவேஜுகளையும் படிப்பார்.

சில நாட்களில் நீண்ட நேரத்திற்குப் பின், மாறுவேடத்துடன் தம் காரில் ராமகிருஷ்ண மடத்திற்குச் செல்வார். அங்கு சுவாமிகள் அணியும் ஆடையை அணிந்து, கையில் துளசி மாலையுடன் பூஜை அறைக்குள் சென்று, அதனைத் தாளிட்டுவிட்டு, சுமார் இரண்டு மணி நேரம் தியானத்தில் இருப்பார். சிக்கல்கள் நிறைந்த பல பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு, இது மிக உதவியாக இருந்தது.

தாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் கடவுளின் துணையையே நம்பினார். கடவுளே தம் இருகரங்களாலும் தம்மை அழைத்துச் செல்வதாக உணர்ந்தார். அதனால் அவர் முகத்தில் தெளிவும், இரும்பு போன்ற உறுதியும், அமைதியுடன் கூடிய அசையாத நம்பிக்கையும், வெற்றி தோல்விகளால் பாதிக்கப்படாத மனப்பாங்கும் காணப்பட்டன.

அவருடைய கடவுள் பக்தியை வெளி உலகிற்குக் காட்டிய அறிகுறி ஒன்று மட்டும் தான்—அதாவது அவருடைய சொந்தச் சாமான்கள் அடங்கிய மிகச் சிறிய தோல்பை. அதனுள் இரண்டு அங்குல அகலமும், இரண்டரை அங்குல நீளமுள்ள மிகச் சிறிய பகவத்கீதை புத்தகமும், சிறு துளசி மாலையும், ஒரு ஜதை மூக்குக் கண்ணாடியுமே இருந்தன. பல ஆண்டுகளாக இந்த விஷயம் அவருக்குப்பணி செய்யும் ஊழியருக்கு மட்டுமே தெரியும். தம் கடவுள் பக்தியைப் பரம ரகசியமாக வைத்திருந்தார். அதனைப் பகட்டாக வெளி உலகிற்குக் காட்டவில்லை. கடவுளைப் பற்றி நேதாஜி ஒருமுறைகூட பகிரங்கமாகப் பேசியது இல்லை. ஆனால் அவருடனேயே வாழ்ந்தார்.

—எஸ்.ஏ. அய்யர்
"Unto Him a witness" (1951)
பக்கம்—269
நன்றி: ''பண்பு''
டி.வி.எஸ். செய்தி பிரசுரம்
மதுரை—625001

# அன்னை ஸ்ரீ சாரதா தேவியார்

அ. லெ. நடராஜன்

### தாய்மை

பெண்மைக்குப் பெருமை தருவது தாய்மை இயல்பு. இந்தத் தாய்மை இயல்பு, பறவை முதல் விலங்கு, மனிதன் ஈருக, பெண் இனத்திடம் வியாபித்து இருப்பதை நாம் கண்கூடாகக் காணலாம். பெட்டைக் கோழி தன் குஞ்சுகளைக் குப்பை மேட்டுக்குக் கூட்டிப்போய், அவற்றுக்கு உணவு உண்ணக் கற்றுக் கொடுப்பதையும், குரங்குக்குட்டி தாய்க் குரங்கின் மார்பை விடாது இறுகப் பற்றிக்கொண்டு பால் பருகுவதையும் நாம் அன்ருட வாழ்வில் பார்க்கிறோம்.

இந்தத் தாய்மை இயல்பு மனித இனத்தில் மேன்மையான ஒரு இடத்தைப் பெற்றுத் தெய்வீக நிலைக்கு உயர்ந்திருக்கிறது.

அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரிடம் தியாகம், அன்பு, பணிவு, வாஞ்சை முதலிய அறப் பண்புகள் அவருடைய ஆன்மீக வாழ்க்கையிலும் லௌகிக வாழ்க்கையிலும் விரிந்த அளவில் செயல்பட்டிருக்கின்றன.

அன்னை காமார்ப்புக்குரில் இருக்கும்போதும் சரி, அல்லது கல்கத்தாவில் இருக்கும்போதும் சரி, அவரைக் காணப் பலர் வருவார்கள். வந்தவர்களை உணவு படைத்து உபசரிக்காமல் அன்னை அனுப்ப மாட்டார். அதோடு மட்டும் அன்னை இருப்பது இல்லை. வந்தவர்கள் உண்ட வட்டில்களையும் எச்சில் இலைகளையும் எடுத்துச் சுத்தப்படுத்த பிறரை அவர் அனுமதிக்க மாட்டார்.

ஒருமுறை சுவாமி விஸ்வேஸ்வரானந்தர் அன்னையைத் தரிசிக்கும் பொருட்டு, ஜெயராம்பாடி வந்திருந்தார். வழக்கப்படி உணவு படைத்து அன்னை அவரை உபசரித்தார். சாப்பிட்டு முடிந்ததும், சுவாமி தான் உண்ட வட்டிலை எடுத்து அலம்பச் சென்ருர். அதற்கு அன்னை அவரை அனுமதிக்காமல், வட்டிலை வாங்கித் தாமே அலம்பினுர். ''மகனே! தாயின் மடியில் இருந்து குழந்தை அசுத்தப் படுத்தினுல், தாய்தானே அதை அலம்பிச் சுத்தம் செய்து கொள்கிருள்? அதுபோல என் குழந்தைகளின் எச்சில் வட்டில்களை அலம்பிச் சுத்தப்படுத்துவது என் கடமை'' என்று சொன்னுர்.

அன்னையாருடன் வசித்த மற்ற மாதர்கள் இத்தகைய காரியங்களைச் செய்யக் கூச்சப்படுவார்கள். இவ்வாறு செய்வது தகாது என்று அன்னையிடமும் கூறுவார்கள். ''அம்மா! நீங்கள் பிராம்மண குலத்தில் பிறந்தவர்கள்; குருஸ்தானத்தை வகிப்பவர்கள்; அத்தகைய நீங்கள் உங்களுடைய சீடர்களின் எச்சில் வட்டில்களை அலம்புவது அடுக்குமா?'' என்று கேட்பார்கள்.

அதற்கு அன்னை கள்ளம் கபடம் இல்லாத இயல்பான தொனியில், ''அவர்கள் என்னுடைய குழந்தைகளே ஆவர். நான் அவர்களுடைய தாய் ஆவேன். குழந்தைகளின் எச்சில் வட்டில்களைத் தாய் அலம்பாமல் வேறு யார் அலம்புவார்கள்'' என்று பதில் சொல்வார்.

### ராஷ்பிகாரி

ராஷ்பிகாரி என்னும் பிரம்மசாரி ஒருவர் அன்னையிடம் பணி புரிந்தார். விவரம் தெரியாத குழந்தைப் பருவத்திலேயே தன் அன்னையை அவர் இழந்து விட்டார். அதனுல் பிற மாதர்களை 'அம்மா' என்று கூப்பிட அவர் கூச்சப்படுவார். ''அம்மா!'' என்று அழைக்க, பிறருக்கு அன்னையர் இருக்கிருர்கள். எனக்கு என்று அம்மா ஒருத்தி இல்லையே—என்று அவர் ஏங்குவார்.

அவருக்குள்ள இந்த ஏக்கத்தைப் புரிந்து கொண்டு, அன்னை அதை அகற்ற விரும்பினுர். ஒரு நாள் அன்னை தமது உறவினர் ஒருவருக்கு ஒரு செய்தியை அனுப்ப விரும்பினுர். ஆகவே அவர் ராஷ்பிகாரியைக் கூப்பிட்டு, ''நான் உன் மூலம் ஒரு செய்தி அனுப்ப விரும்புகிறேன். அதை அப்படியே தெரிவிப்பாயா?'' என்று கேட்டார்.

''தெரிவிக்கிறேன்'' என்று பிரம்மசாரி ஒப்புக்கொண்டார்.

சொல்லி அனுப்ப வேண்டிய செய்தியை ராஷ்பிகாரியிடம் தெரிவித்து, ''இதை நீ எப்படி அவரிடம் தெரிவிப்பாய்?'' என்று அன்னை கேட்டார்.

''அவர் இந்தச் செய்தியை உம்மிடம் சொல்லச் சொன்னுர் என்று கூறுவேன் ''என்று ராஷ்பிகாரி சொன்னுர்.

அதற்கு அன்னே, ''அப்படிச் சொல்ல வேண்டாம்; அம்மா இவ்விதம் சொன்னுர் என்று சொல்'' என்று சொல்லிக் கொடுத்தார். அம்மா என்னும் வார்த்தையை அன்னை அழுத்தமாக உச்சரித்தார்.

பிறர் ஏங்கித் தவிப்பதை தாய்மை இயல்பு பொறுக்காது. பிறர்படும் ஏக்கத்தைப் போக்க, அன்னை எவ்வளவு இங்கிதமாக முயன்று இருக்கிருர் என்பதை இந்த நிகழ்ச்சியின் மூலம் அறிகிருேம்.

### துறவுப் பெயர்

அன்னை ஸ்ரீ சாரதாதேவி, நூற்றுக்கணக்கான சீடர்களைத் துறவு நெறியில் செலுத்தி இருக்கிருர். இருப்பினும் தம் சீடர்களைத் துறவுப் பெயரால் அவர் அழைக்க மாட்டார். அப்படி அழைப்பதை அவருடைய தாயுள்ளம் விரும்பவில்லை. ''நான் என் சீடர்களுக்குத் தாயாக விளங்குவதால், துறவிகள் ஆகி விட்ட போதிலும் அவர்களைத் துறவுப் பெயரால் அழைப்பது என் மனதை உறுத்துகிறது. துறவு என்ருல் அனைத்தையும், தாய்-தந்தையர் மீதுள்ள பந்த பாசம் உட்பட அனைத்தையுமே துறப்பது என்பது பொருள். எந்த ஒரு தாயும் தன் புதல்வன் தன்னைவிட்டுப் பிரிந்து போவதை ஒருபோதும் விரும்ப மாட்டாள்'' என்று அன்னை விளக்கம் கூறினுர்.

### இறை இயல்பு

ஒரு சமயம் துறவி ஒருவர் அன்னை சாரதாவிடம், ''எங்களை நீங்கள் யார் எனக் கருதுகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''நாராயணர்களாகக் கருதுகிறேன்'' என்று அன்னை பதில் சொன்னுர்.

உடனே அந்தத் துறவி, ''நாங்கள் உமது கூற்றுப்படி உம் புதல்வர்கள் ஆவோம். அப்படி இருக்கும்போது எங்களை நீங்கள் நாராயணர்களாகக் கருதுவீர்களாயின், நாங்கள் எப்படி உம் புதல்வர்களாக முடியும்?'' என்று மீண்டும் விளக்கம் கேட்டார்.

அதற்கு அன்னை, ''நான் உங்களை நாராயணர்களாகவும் கருதுகிறேன்; என் புதல்வர்களாகவும் கருதுகிறேன்'' என்று விடை அளித்தார்.

### பூனை

அன்னையின் தம்பி மகள் ராது ஒரு பூனையை வளர்த்தாள். அதற்கு நாள்தோறும் அன்னை அரை ஆழாக்குப் பால் கொடுப்பார். பூனையும் பாலைக் குடித்துவிட்டு அங்கும் இங்கும் சுற்றித் திரியும். சில சமயங்களில் வீட்டில் இருக்கும்



பண்டங்களைத் திருடித் தின்றுவிடும். இதைப் பார்த்தவர்கள் அதை அடித்துத் துரத்தினுல், அன்னையின் காலடியில் போய் அது படுத்துக் கொள்ளும்.

இதைக் கவனித்தவர்கள் அன்னையிடம் குறைபட்டுக் கொண்டார்கள். ''அன்னையே! நீங்கள் சலுகை காட்டுவதால்தான், இந்தப் பூனை திருடித் திருடித் தின்கிறது'' என்று தெரிவித்துக் கொண்டார்கள்.

இதைச் செவிமடுத்த அன்னை புன்முறுவல் பூத்தவாறே, ''பூனையின் இயல்பு திருடித் தின்பது. இதை யாரும் மாற்ற முடியாது!'' என்று இயல்பான ஒரு பதிலைச் சொன்னுர்.

செல்லமாக வளர்ந்த இந்தப் பூனைக்குக் குடும்பம் பெரிதாகிவிட்டது. வீட்டில் நாலைந்து பூனைகள் அங்கும் இங்கும் திரியத் தொடங்கின.

இந்தப் பூனைகள் அனைத்தையும் அன்னை வாஞ்சையோடு கவனமாகப் பேணிக் காப்பாற்றினுர். யாரும் பூனைகளை அடிக்கவோ துரத்தவோ அவர் அனுமதிக்க மாட்டார்; மீறி யாராவது பூனைகளை அடித்தால், அன்னை அவர்களைக் கடிந்து கொள்வார்.

ஞான் என்னும் பிரம்மசாரி ஒருவர் அன்னையுடன் வசித்தார். பூனைகள் தொந்தரவு

கொடுப்பதைப் பொறுக்காமல், அவற்றை அவர் அடிக்கடி அடித்துத் துரத்துவார். இதை அன்னை காண நேர்ந்தால், பிரம்மசாரி ஞானை கடிந்து புத்திமதி சொல்லுவார்.

ஒரு சமயம் அன்னை கல்கத்தா போக வேண்டியிருந்தது. அது சமயம் பிரம்மசாரி ஞானைத் தன்பால் அழைத்து, ''இதோ பார் ஞான்! சோறு சமைத்துப் பூனைகளுக்கும் கொடு; கொடுக்காது நீ அவற்றைப் பட்டினி போட்டால், பூனைகள் அண்டை வீடுகளுக்குப் போய் திருடித் தின்னத் தொடங்கும். அதனால் அவர்கள் நம்மை ஏசும் நிலை ஏற்படும்'' என்று சொன்னார்.

பெண்மையில் குடிகொண்டிருக்கும் தாய்மை இயல்போடு, தெய்வீக இயல்பும் கொண்டிருந்த அன்னை, இவ்வாறு எளிய உயிர்களிடமும் வாழ்நாள் முழுவதும் அன்பு காட்டினார்.

அன்னையின் சொற்படி அந்தப் பிரம்மசாரி கண்ணும் கருத்துமாய் பூனைகளைக் கவனித்துக் கொண்டார்.

### தாய்மை உணர்வு

தங்கள் குழந்தை குட்டிகளுக்கு ஏதாவது நோய் நொடி ஏற்பட்டால், லௌகீகத் தாய்மார்கள் இறைவன் இறைவியரிடம் நேர்த்திக் கடன் செய்து கொள்வது வழக்கம். குழந்தைகளுக்கு நோய் குணமாகிவிட்டால், சந்தனக் காப்பு செய்கிறேன், பால் அபிஷேகம் செய்கிறேன் என்று தாய்மார் வேண்டிக் கொள்வது உண்டு. அதேபோல, ஞானத்தாயாக முழு அளவில் விளங்கிய ஸ்ரீ சாரதா தேவியாரும், தம் ஞானக் குழந்தைகளின் உடல் நலம் கருதி நேர்த்திக்கடன் செய்து கொண்டிருக்கிறார்.

ஒரு சமயம் சுவாமி சாரதானந்தர் உடல் நலம் குன்றி இருந்தார். இது விவரம் தெரிய வந்ததும் உத்போதன் அலுவலகத்தில் தங்கி இருந்த அன்னை, சுவாமி மகேஷ்வரானந்தரிடம் ஒரு ரூபாயைக் கொடுத்து, ''இந்த ஒரு ரூபாயை பேலூர் மடத்தின் நிர்வாகி பிரேமானந்தரிடம் தந்து, சரத்தின் உடல் நலனுக்காக, துளசி இலைகளால் அர்ச்சனை செய்ய சொல்லுங்கள்'' என்று சொன்னார்.

பேலூர் மடம் திரும்பிய சுவாமி மகேஷ்வரானந்தர் அவ்வாறே செய்தார்.

### இல்லறச் சீடர்கள்

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்களையும் பக்தர்களையும் மட்டுமே அன்னை தம் புதல்வர் புதல்வியராகக் கருதினார் என்பதில்லை. ஏனைய இல்லறப் பெண்டிரையும் ஆடவரையும் கூட, தன் சொந்தப் புதல்வி புதல்வராகவே அவர் கருதி அன்பைப் பொழிந்தார்.

வைத்தியர் குலத்தைச் சேர்ந்த பெண்மணி ஒருத்தி, தன் வீட்டிலேயே கறிகள் சிலவற்றைப் பக்குவம் செய்து, அவற்றை எடுத்து வந்து அன்னை சாரதாவுக்குக் கொடுப்பது வழக்கம்.

இந்தப் வழக்கப்படி ஒரு பெண்மணி கறிகளைச் சமையல் செய்து எடுத்துக் கொண்டு அன்னையிடம் கொடுப்பதற்காக வந்தார்.

அப்போது அன்னையுடன் அவருடைய தம்பி புதல்வி நளினி இருந்தாள்.

கறிகள் எடுத்து வந்த பெண்மணியிடம், ''ஏன் இவ்வளவு சிரமப்பட்டுக் கறிகளைத் தயாரித்து எடுத்து வருகிறாய்'' என்று அன்போடு சொன்னார் அன்னை.

உடனே நளினி, ''அத்தை! நீங்கள் தயார் செய்து எடுத்து வரச் சொல்வதால்தான் அவள் எடுத்து வருகிறாள்'' என்று குறுக்கிட்டு, குத்தலாகச் சொன்னாள்.

நளினி இவ்வாறு துடுக்காகச் சொன்னவுடன், ''பெண்ணே! அவர்கள் அனைவருமே என் புதல்வியர் ஆவர். சமையல் செய்து எடுத்து வரும்படி அவர்களிடம் கூற எனக்கு எப்படி உரிமை இல்லாமல் போகும்'' என்று அன்னை கூறினார்.

அன்று இரவு அன்னை, வைத்தியர் குலத்துப் பெண் தயாரித்து வந்த கறிகளைச் சுவைத்துச் சாப்பிட்டார். துடுக்குக் குணமுள்ள நளினியும் அவற்றைச் சாப்பிட்டுப் பார்த்து விட்டு, ''ஆம், சுவையாகத்தான் இருக்கிறது. எவ்வித வெறுப்பும் எனக்கு உண்டாகவில்லை'' என்று ஆர்ப்பரித்தாள்.

உடனே அன்னை பெருமையுடன், ''என் புதல்விகள் சமைக்கும் உணவில் யாருக்கு வெறுப்பு ஏற்பட முடியும்'' என்று உரைத்தார்.

### பேத உணர்வு இல்லை

உயர்ந்தவர், தாழ்ந்தவர், படித்தவர், படியா

தவர், ஆடவர், பெண்டிர், யோக்கியன், அயோக்கியன் என்னும் வேற்றுமைகளை ஒரு சிறிதும் கருத்தில் கொள்ளாது அன்னை சாரதா அனைவரையுமே சமமாக நேசிப்பது வழக்கம்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் நேர் சீடர் ஒருவரிடம், பக்தர் ஒருவர் ஏதோ முரட்டுத்தனமாக நடந்து கொண்டார். இது அந்த சீடருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே அந்த நேர் சீடர் அன்னை சாரதாவிடம், ''அம்மா! அந்த அன்பர் முரட்டுத்தனமாக நடந்து கொள்கிறார். தங்கள் அருகே வர அவரை அனுமதிக்க வேண்டாம்'' என்று சொன்னார்.

உடனே அன்னை சாரதா அவரிடம், ''மகனே! உலகில் பிழை செய்யாதவர்கள் என்று யாரும் இல்லை. தன் குழந்தை தன் மீது புழுதியை வாரிப் போட்டுக் கொண்டால், அதைத் துடைக்காமல் எந்தத் தாயும் இருப்பாளா? முதலில் புழுதியைத் துடைத்துவிட்டு, பிறகு குழந்தையைத் தன் மீது தூக்கி வைத்துக் கொள்ளாமல் இருப்பாளா!'' என்று தமது இயல்பின்படி கேட்டார்.

அன்னைக்கு இருக்கும் அன்பின் ஆழத்தைத் தெரிந்து கொண்டு, அந்த நேர் சீடர் சும்மா இருந்தார்.

### அன்பின் ஆழம்

அன்னையின் அன்பு எவ்வளவு ஆழமானது என்பதை அறிவிக்கும் மற்றொரு நிகழ்ச்சி வருமாறு.

ஒரு சமயம் அன்னை கல்கத்தாவில் உத்போதன் அலுவலத்தில் வசித்தார். அதுசமயம் திருடியதற்காக, சிப்பந்தி ஒருவனை சுவாமி விவேகானந்தர் மடத்தை விட்டு வெளியே அனுப்பி விட்டார். பரம ஏழையான அவன், தனது சம்பாத்தியத்தைக் கொண்டு மனைவி மக்களைக் காப்பாற்றி வந்தான். இப்பொழுது அந்தச் சம்பாத்தியத்துக்கு வழி இல்லாமல் போயிற்று. ஆகவே அவன் கதிகலங்கிப் போனான். நேரே உத்போதன் அலுவலகத்துக்குச் சென்று அன்னையிடம் முறையிட்டுக் கொண்டான்.

அன்னை அவன் மீது மிகவும் பரிவு கொண்டு, அவனை உத்போதன் அலுவலகத்தில் தங்கச் செய்தார். அவனுக்குச் சாப்பாடும் போட்டு உபசரித்தார்.

அன்று மாலையே அன்னையைத் தரிசிக்கும் பொருட்டு, சுவாமி பிரேமானந்தர் உத்போதன் அலுவலகத்துக்கு வந்தார். அவரிடம் அன்னை, ''இதோ பார் பாபுராம்! அந்த மனிதன் பரம ஏழை. வறுமையின் விளைவாக அவன் திருடிவிட்டான்போல் தெரிகிறது. அதற்காக நரேன் இவனை வெளியே துரத்தலாமா? உலகம் துன்பமயமானது என்னும் உண்மை உங்களைப் போன்ற துறவிகளுக்கு எளிதில் புரியாது. ஆகவே அவனை மடத்துக்கு அழைத்துப் போ'' என்று சொன்னார்.

சுவாமி பிரேமானந்தர் காரண காரியங்களைச் சொல்லிப் பார்த்தார். அன்னை உறுதியாக இருந்தார். 'அவனை அழைத்துப் போ' —என்று பிடிவாதமாகச் சொன்னார்.

மறு பேச்சுப் பேசாமல் அவனை அழைத்துக் கொண்டு அந்தி வேளையில் சுவாமி பிரேமானந்தர் பேலூர் மடம் திரும்பினார்.

தான் துரத்திய திருடனை சுவாமி பிரேமானந்தர் அழைத்து வந்திருப்பதைப் பார்த்ததும் சுவாமி விவேகானந்தர், ''சிறிதும் யோசிக்காமல் பாபுராம் செய்துள்ள காரியத்தைப் பாருங்கள். விரட்டிய திருடனை உடன் அழைத்து வந்திருக்கிறார்'' என்று சொன்னார்.

''அன்னையின் கட்டளை இது!'' என்று சுவாமி பிரேமானந்தர் தெரிவித்ததும், சுவாமி விவேகானந்தர் உடனே மறு பேச்சில்லாமல் மௌனமாகி விட்டார்!

பிள்ளைகள் செய்யும் குற்றங்களைப் பெரிது படுத்தாமல் பொறுத்துக் கொள்ளும் இயல்பு, அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரிடம் முழு அளவில் கோயில் கொண்டிருந்தது. இந்த உண்மையை அவரது வாழ்வில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளின் மூலம் அறியலாம்.

### இடைச் சிறுவன்

ஏழை எளியவர்கள், மடத்தைச் சேர்ந்த துறவிகள், பிரம்மசாரிகள் என்று வேற்றுமை பாராட்டாது, தன்னால் இயன்ற உதவிகளை அவரவருக்கும் அன்னை எப்போதும் செய்திருக்கிறார்.

அன்னை ஜெயராம்பாடியில் வசிக்கும்போது, பக்தர் ஒருவர் அன்னைக்குப் பசுமாடு ஒன்று வாங்கிக் கொடுத்தார். அந்த மாட்டைப் பராமரிப்பதற்கான செலவையும் அவரே கொடுத்

தார். அதை மேய்ப்பதற்கும், பாதுகாப்பதற்கும் கோவிந்தன் என்னும் இடைச் சிறுவன் ஒருவனைத் தன் செலவில் அவர் வேலைக்கு அமர்த்தினர். அந்தப் பையன் உற்சாகமானவன்; ஒழுங்கானவன்.

வேலைக்கு வந்து சில தினங்களுக்குப்பின், உடம்பு முழுவதும் அவனுக்குச் சொரி சிரங்கு வந்துவிட்டது. மருத்துவம் செய்தும் குணமாகவில்லை. வலியைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் அந்தச் சிறுவன் அழுதான். தூங்க முடியாமல் சிரமப்பட்டான்.

இதைக் கவனித்த அன்னை, மறுதினம் காலையில் தாமே வேப்ப இலையையும் மஞ்சளையும் வைத்து அம்மியில் அரைத்தார். பிறகு கோவிந்தனைக் கூப்பிட்டு, தான் அரைத்த மருந்தை அவனிடம் கொடுத்து, புண்கள் இருக்கும் எல்லா இடங்களிலும் போட்டுக்கொள்ளச் செய்தார். அன்னை சொன்னபடி அவன் மருந்தைத் தடவிக் கொண்டான். சில தினங்களில் சிரங்கு முழுவதும் ஆறிவிட்டது.

### மைனு

பூனைகளை அன்போடு வளர்த்ததைப் போலவே, மைனுக் குருவி ஒன்றையும் அன்னை அன்போடு பேணி வளர்த்தார்; மைனுவைக் குளிப்பாட்டித் துடைத்துவிட்டு, தானியமணிகளை உணவாகக் கொடுப்பார்; ''ஹரே ராமா! ஹரே கிருஷ்ணு!'' என்று இறைவன் திருநாமத்தைக் கூறும்படி அந்த மைனுவுக்குக் கற்றுக் கொடுப்பார்; அந்த மைனுவுக்கு அன்னை 'கங்காராம்' என்று பெயர் சூட்டி இருந்தார். பிரம்மசாரிகளின் பெயர்களைச் சொல்லி அன்னை அழைப்பதையும், அவர்கள் அன்னையை ''அம்மா, அம்மா'' என்று அழைப்பதையும் மைனு கேட்டுக் கொண்டு இருக்கும். பிறகு அவர்களைப் போலவே அது பேசவும் ஆரம்பித்தது. தனக்குப் பசியாய் இருந்தால் அந்த மைனு, ''அம்மா, அம்மா'' என்று கூப்பிடும். உடனே அன்னை, ''இதோ, வந்துவிட்டேன் மகனே!'' என்று கூறிக்கொண்டே போய் அதற்கு தானியத்தை உணவாகப் போடுவார். அது பருகும் பொருட்டு, ஒரு கிண்ணத்தில் தண்ணீரையும் வைப்பார்.

### மூடபக்தி

பக்தர்களில் மூடர்களும் உண்டு; பொறுப்பில்லாதவர்களும் உண்டு. ஒரு நாள் பொறுப்பில்லாத மூடபக்தன் ஒருவன் அன்னையைத் தரிசிக்க வந்தான். தரிசித்துவிட்டுத் திரும்பும்போது, அன்னை கையாலேயே கொஞ்சம் பிரசாதம் வாங்கிக் கொண்டுத் திரும்ப விரும்பினான். தனது விருப்பத்தை அன்னையிடமும் அவன் தெரிவித்தான்.

பக்தனின் விருப்பம் தெரிய வந்ததும், அன்னை ஒரு சிறு பித்தளைத் தட்டில் கொஞ்சம் சாதத்தை வைத்து அந்தப் பக்தனிடம் கொடுத்து, ''மகனே! இந்த சாதத்தை வெய்யிலில் உலர்த்தி, பிறகு பிரசாதமாக எடுத்துச் செல். ஆனால் காக்கைகள் வந்து சாதத்தைக் கொத்தித் தின்னுதபடி கவனித்துக் கொள்'' என்று கூறிக் கொடுத்தார்.

'சரி' என்று சம்மதித்து சாதத்தை வாங்கி வெய்யிலில் உலர வைத்துவிட்டு, புகைபிடிக்கும் பொருட்டுப் பொறுப்பில்லாது அந்தப் பக்தன் அப்பால் போய்விட்டான். போனவன் மாலை மூன்று மணி வரை அயர்ந்து தூங்கிப் போனான். பிறகு துணுக்குற்று எழுந்து சாதத்தைக் காய வைத்த இடத்துக்குச் சென்றான்.

அங்கே உலர வைத்த சாதத்தைக் காக்கைகள் கொத்தி விடாதபடி, அன்னை காவல் புரிவதைக் கண்டு, ''தாயே! இன்று தாங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளவில்லையா?'' என்று தயக்கத்துடன் கேட்டான்.

''ஆம், மகனே! நான் ஓய்வு எடுத்துக் கொள்ளவில்லை. உனக்குத் தந்த பிரசாதத்தை காக்கைகள் கொத்தி விடாதபடி கவனித்துக் கொண்டேன்'' என்று அமைதியோடு அன்னை பதில் சொன்னார்.

பிறருடைய நலத்தைப் பேணுவதில் அன்னை கண்ணும் கருத்துமாய் இருந்ததற்கு, இதைப் போன்ற பல நிகழ்ச்சிகளையும் உதாரணமாகச் சொல்லலாம்.



மூடனுடைய பாவம் அவனிடமே பிறந்தது, அவனே படைத்தது. வயிரம் மற்ற மணிகளை அறுப்பது போல, அவன் செய்த பாவமே அவனை அழித்துவிடும்.
—புத்தர்



# உயர்ந்த வாழ்க்கை

திருமுருக கிருபானந்தவாரியார்

பிஞ்சு, காய், கனி என்பன, ஆசை, அன்பு, அருள் ஆகியவற்றுக்கு உவமைகள். நாம் எல்லோரும் உயர்ந்திருக்க வேண்டும் என்றுதான் எண்ணுகிறோம். ஆனால் உயர்வு பெற்றவர்—பெறுகிறவர் ஒரு சிலரேயாவர். இதற்கு என்ன காரணம்? உயர்வு அடைய வேண்டும் என்று எண்ணுகின்றோமேயன்றி, அதற்குரிய வழி வகைகளை நாம் நன்கு சிந்திக்கிறோமில்லை. சிந்தித்து அதனைச் செயல்முறையில் கொண்டு வருகிறோமில்லை.

பணம், படிப்பு, குலம், உத்தியோகம், அழகு ஆகியவற்றுள் உயர்ந்தவர்களை, உயர்ந்தவர்கள் என்று ஆன்றோர்கள் ஒப்புக் கொள்ளுவதில்லை.

நாம் உயர்வு பெற ஒரே ஒரு வழி உண்டு. இதனை அன்பர்கள் நன்கு மனதில் பதிய வைத்துக் கொள்ள வேண்டும்.

**நமது உள்ளம் உயர்ந்தால்**
**நாம் உயர்வு பெறலாம்**

ஒரு குளத்தில் பத்தடி ஆழம் தண்ணீர் இருந்தது. அதில் உள்ள தாமரைத் தண்டின் நீளமும் பத்தடி இருக்கும். அத்தண்டினை நீட்ட வேண்டும். அதற்கு என்ன வழி? இரண்டு பயில்வான்கள் இரண்டுபுறம் பிடித்து இழுத்தால் தண்டு நீளுமா? நீளாது. அறுந்து போகும்.

மழை பொழிந்தது. குளத்தில் நீர் இன்னும் பத்தடி உயர்ந்துவிட்டது. அதனால் இயல்பாகவே தாமரைத் தண்டின் நீளமும் உயர்ந்து விட்டது. எனவே, வெள்ளம் உயர உயர மலர் உயர்வது போல, நம் உள்ளம் உயர உயர நமது உயர்வும் வளரும். இந்த அருமையான கருத்தை நமக்குத் தெளிவாகத் திருவள்ளுவர் தருகிறார்.

**வெள்ளத்தனைய மலர் நீட்டம்-மாந்தர்தம்**
**உள்ளத் தனையது உயர்வு**

இனி உள்ளம் எவ்வாறு உயரும் என்று சிந்திக்க வேண்டும்.

நம்மை நாமே சோதித்துப் பார்க்கும் வழக்கம் ஒவ்வொருவருக்கும் உண்டாக வேண்டும். இந்த வழக்கம் அநேகரிடம் இல்லை. சட்டைப் பையில் மணிபர்ஸ் இருக்கிறதா என்று அடிக்கடி சோதித்துக் கொள்ளுகிறோம். பெட்டியில் வைத்த சாமான்கள் இருக்கின்றனவா என்று சோதித்துப் பார்க்கிறோம். நம்மை நாம் இன்னும் சோதித்துப் பார்க்கவில்லை.

காந்தியடிகள் கடைசி வரை, தம்மையும் தம் வாழ்க்கையையும் சத்தியம் என்னும் அளவு கோலைக் கொண்டு அளந்து சோதித்துக் கொண்டே யிருந்தார். அதனால் அவருடைய வரலாற்றுக்குச் 'சத்திய சோதனை' என்று பெயர் உண்டாயிற்று.

அநேகர் மனைவியைச் சந்தேகித்துச் சோதிக்கிறார்கள். அவள் இல்லாதபோது அவள் பெட்டியைத் திறந்து சோதிக்கிறார்கள். மனைவி கணவனைச் சோதிக்கிறாள். எஜமான் பணியாளனைச் சோதிக்கிறான். ஆனால் தன்னை மட்டும் சோதித்துக் கொள்வதில்லை. அன்பர்கள் நன்கு சிந்தியுங்கள்.

நமது உள்ளத்தில் ஆசை இருக்கிறதா? அன்பு இருக்கிறதா? அருள் இருக்கிறதா? என்று சதா சோதித்துப் பார்க்க வேண்டும். நம்மை நாம் சோதிப்பதினால் உள்ளத்தில் மண்டிக் கிடக்கும் ஆசாபாசங்கள் நீங்கும். அன்பு ஓங்கும். அருள் தேங்கும்.

முதலில் வீட்டில் உள்ள குப்பை கூளங்களை அகற்ற வேண்டும். பின்னர் மெழுகிக் கோலம் போட்டுத் திருவிளக்கு ஏற்ற வேண்டும். அப்போதுதானே வீடு அழகாக இருக்கும்? அது போல் நம் உள்ளத்தில் உள்ள காமக் குரோதங்களாகிய புழுதிகளை அகற்றி, நல்ல எண்ணங்களாகிய சாணத்தால் மெழுகி, அன்பு என்ற கோலம் இட்டு, அருள் என்ற திருவிளக்கை ஏற்ற வேண்டும்.

உயிரோடு கூடி வாழ்கின்றவர் யார்? மூச்சு விடுவதனுலும் நடமாடுவதனுலும் ஒருவன் உயிர் வாழ்கிறவன் ஆகமாட்டான். அன்பு நிறைந்த உள்ளம் படைத்தவனே உண்மையாக உயிர் வாழ்க்கை உடையவனுவான். அன்பில்லாதவன் எலும்பின் மீது தோல் போர்த்திய ஒரு பொம்மையே.

**அன்பின் வழியது உயர்நிலை; அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு.**

என்கிருர் திருவள்ளுவர்.

அன்பு என்ருல் என்ன? அதன் சொரூபம் யாது? என்றும் நுணுக்கமாகச் சிந்திப்போமாக.

ஆசை என்ற ஒன்று நம் உள்ளத்தில் உள்ளது. அதுதான் நம் துன்பங்களுக்கெல்லாம் காரணம்.

**அவாவில்லார்க்கு இல்லாகுந் துன்பம்**
**அஃதுண்டேல் தவாஅது மேன்மேல் வரும்.**

—திருக்குறள்

ஆசையில் தன்னலம் நிறைந்திருக்கும். தானே வாழ வேண்டும், மற்றவன் அழிய வேண்டும், தனக்குச் சமானமாக ஒருவன் இருக்கக் கூடாது என்று எண்ணுவார்கள். இவர்கள் ஆசையால் விழுங்கப்பட்டவர்கள்.

தொடர்புடையார் மாட்டு உள்ளத்தில் நிகழும் விருப்பமே அன்பு என்று சிலர் கூறுவார்கள். அது பிழை.

தொடர்புடைய மனைவி, மக்கள், நண்பர் முதலியோர்களிடம் பயன் கருதி வைக்கும் விருப்பம் ஆசையாகும். அது அன்பு ஆகாது. மனைவிக்கு உயர்ந்த ஆடை அணிகலன்களைக் கணவன் தருகின்ருன். அது அன்பினுலன்று. தான், அவளை அலங்கரித்துக் கண்டு மகிழ வேண்டும் என்று பயன் கருதிச் செய்வதனுல் அது ஆசையே ஆகும். அதுபோலவே மகனைப் பணம் செலவழித்துப் படிக்க வைக்கிருன். முதுமைப் பருவத்தில் மகன் தன்னைக் காப்பாற்றுவான் என்ற நோக்கத்தோடு செய்வதனுல் அது தன்னலமாகும். அதுவும் அன்பு ஆகாது. நண்பர்களுக்கு உயர்ந்த விருந்து வைக்கிருன். அவர்கள் தன்னை மெச்சிப் புகழ வேண்டும் என்ற நோக்கமேயாதலின், அதுவும் அன்பு அன்று.

பலர் கோயிலுக்குப் போய்க் கடவுளுக்குத் தடபுடலாகப் பெரிய அபிஷேகம் ஆராதனை செய்கிருர்கள். கடவுள் கருணையால் நமக்கு வருமானவரிக் கணக்குச் சுமுகமாக முடியும், வியாபாரம் வளரும், புத்திரப் பேறும், உத்தியோக உயர்வும் உண்டாகும் என்ற நோக்கத்தோடு செய்வதனுல் இதுவும் அன்பு ஆகாது. இது அன்பு வழிபாடு அன்று; ஆசை வழிபாடே ஆகும்.

**"ஆசை யறுமின்கள் - ஆசை யறுமின்கள்**
**ஈசனே டாயினும் ஆசை யறுமின்கள்"**

என்கிருர் திருமூலர்.

கோயிலிலே மின்சார விளக்கிடுவார்கள். அதில் உள்ள ஒளியை மறைத்துத் தன் பேரைப் பொறித்து வைத்திருப்பார்கள். இது, தன் புகழின் மீதுள்ள ஆசை. இதுவும் சிறந்த அன்பு ஆகாது.

ஆசையில் தன்னலம் உள்ளது. பயன் கருதிச் செய்கிற அத்தனையும் ஆசை மயமானது.

பயன் கருதாமல் செய்கின்ற செயலே அன்பாகும்.

எனவே, மனைவிமீதும், மக்கள்மீதும், நண்பர்கள்மீதும், கடவுள்மீதும் நமக்கு ஆசை இருக்கக் கூடாது. அன்பு இருக்க வேண்டும்.

இப்போது உங்கள் உள்ளத்தைச் சோதித்துப் பாருங்கள். நம் உள்ளத்தில் ஆசை இருக்கிறதா? அன்பு இருக்கிறதா? என்று சிந்தியுங்கள். ஆசை பிறவியைக் கொடுக்கும். அன்பு பிறவியைக் கெடுக்கும். ஆசை நிறைந்த உள்ளத்தில் நல்ல எண்ணங்கள் விளைய மாட்டா. உவர் நிலத்தில் ஒன்றும் விளையாதுதானே?

(தொடரும்)



**கொடுங்கோல் மன்னனின் முன்னிலையில் உண்மையை எடுத்துக் கூறுவதே மிகச் சிறந்த தர்ம யுத்தம்.**

**—நபிகள் நாயகம்**

சிறுவர் பகுதி:

# யார் குற்றவாளி?

விவேகானந்ததாசன்

அரேபியா தேசத்திலே ஒரு சமயம் ஒரு பெரிய திருடன் இருந்தான். அவனுடைய தொந்தரவு தாங்க முடியாத அளவுக்கு வளர்ந்து விட்டது. ஒரு நாள் மக்கள் கூட்டமாகக் கூடிக் கொண்டு அரண்மனைக்குச் சென்றார்கள். மன்னனிடம் அவர்கள், ''திருடனை விரைவில் பிடித்துத் தண்டியுங்கள்'' என்று ஏகோபித்த குரலில் விண்ணப்பித்தார்கள்.

அரசன் திருடனைப் பிடிக்குமாறு அரண்மனை அதிகாரிகளை ஏவினான். அதிகாரிகள் திருடனைப் பிடிப்பதற்காக எங்கெங்கெல்லாமோ சுற்றினார்கள். கடைசியில் ஒருவனைச் சங்கிலியால் பூட்டி, அரசன் முன்பு கொண்டு வந்து, ''இதோ திருடனைப் பிடித்து விட்டோம்'' என்று சொன்னார்கள்.

அரண்மனை அதிகாரிகளால் உண்மையான திருடனைப் பிடிக்க முடியவில்லை. யாரோ ஓர் அப்பாவியைப் பிடித்துக் கொண்டு வந்து திருடன் என்று சொல்லி விட்டார்கள்.

அதிகாரிகள் 'இவன்தான் திருடன்' என்று சொன்னதும், அரசன் நீதி விசாரணை செய்து தன்னைத் திருடன் அல்ல என்று விடுவிப்பான்—என்று அந்த அப்பாவி மனிதன் நினைத்திருந்தான். ஆனால், அரசன் ஆராயாமலும் நீதி விசாரணை செய்யாமலும், 'இந்த குற்றவாளியைக் கொண்டுபோய் தூக்கில் போடுங்கள்' என்று ஆணையிட்டான்!

அரண்மனை சேவகர்கள், அப்பாவி மனிதனைத் தூக்கில் போடுவதற்காகப் பரபர என்று இழுத்துச் சென்றார்கள். மரண தண்டனை நிறைவேற்றப்பட இருந்த சமயத்தில் திருடன், ''ஆஹா, என்னால் ஒன்றும் செய்ய முடியாமல் போய்விட்டதே! ஆஹா, என்னால் ஒன்றுமே செய்ய முடியாமல் போய்விட்டதே! எல்லாம் வீணாகிப் போய்விட்டதே! எல்லாம் வீணாகப் போய்விட்டதே! நான் இப்போது என்ன செய்வேன்?'' என்று சொல்லி முணுமுணுத்தான்.

அவன் சொன்னதைக் கேட்ட அரண்மனை அதிகாரிகள், ''இப்போது என்ன செய்ய முடியாமல் போய்விட்டது என்று நீ முணுமுணுத்துக் கொண்டிருக்கிறாய்'' என்று விசாரித்தார்கள்.

அதற்குத் திருடன், ''மற்றவர்கள் யாராலும் செய்ய முடியாத ஒரு காரியத்தை நான் செய்வேன். இந்த இரகசியம் உலகிலேயே என் ஒருவனுக்குத்தான் தெரியும்'' என்று சொன்னான்.

அரண்மனை அதிகாரிகள், ''அப்படி என்னப்பா பெரிய இரகசியம் உனக்குத் தெரியும்? உலகிலேயே வேறு யாராலுமே செய்ய முடியாத காரியம் என்று வேறு நீ சொல்கிறாயே? என்னதான் விஷயம்?'' என்று கேட்டார்கள்.

திருடன், ''நிலத்தை உழுது பண்படுத்தி நெற்பயிரை விளைவிப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? அதைப்போல உழுது பண்படுத்தித் தங்கத்தை என்னால் விளைவிக்க முடியும்'' என்று சொன்னான்.

இதைக் கேட்டவுடனே அதிகாரிகள் திருடனைத் தூக்கில் போடுவதை ஒத்திவைத்து விட்டு, அரசனிடம் ஓடோடிச் சென்று விஷயத்தைச் சொன்னார்கள்.

அரசன் திருடனை வரவழைத்தான். ''உனக்குத் தங்கம் விளைவிக்கத் தெரியுமாமே, அது உண்மைதானா?'' என்று கேட்டான்.

**திருடன்:-** ஆம், உண்மைதான். ஆனால் அது தெரிந்து என்ன பிரயோசனம்? நீங்கள்தான் என்னை இப்போது தூக்கில் போட்டுவிடப் போகிறீர்களே!

**அரசன்:-** நீ எனக்குக் கொஞ்சம் தங்கத்தைப் பயிர் செய்து தா. அப்படிச் செய்தால் உனக்கு விதிக்கப்பட்டுள்ள மரண தண்டனையை நான் ரத்து செய்து விடுகிறேன்.

திருடன் சம்மதித்தான். அவன் தங்கத்தைப் பயிரிடுவதற்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்து தரும்படி அரசன் அரண்மனை அதிகாரிகளுக்குக் கட்டளையிட்டான்.

திருடன் நிலத்தை உழுது பண்படுத்தினான். விதையை விதைக்க வேண்டிய நேரம் வந்தது. அதிகாரிகள் ஐந்து கூடைகள் நிறைய தங்கத்தை விதைப்பதற்காகக் கொண்டு வந்தார்கள்.

குற்றவாளி தங்கத்தை விதைப்பதை பார்ப்பதற்காக, அரசர் உட்பட அதிகாரிகள் அனைவருமே கூடினார்கள்.

அப்போது திருடன் அரசரைப் பார்த்து, ''மன்னரே! தங்கத்தை யார் விதைப்பது என்பதைத் தாங்கள்தான் இப்போது முடிவு செய்ய வேண்டும். வாழ்க்கையில் ஒரே ஒருமுறைகூட திருடாதவரும், தூய வாழ்க்கை வாழ்ந்து வருபவருமாகிய ஒருவர்தான் தங்கத்தை விதைக்க வேண்டும். அப்போதுதான் தங்கம் பயிராகும்.

''நான் வாழ்க்கையில் ஒரே ஒருமுறைகூட திருடியதில்லை. ஆனால் என்னைத் தாங்கள் திருடன் என்று கூறிவிட்டதால், நான் தங்கத்தை விதைப்பதற்கு வழியில்லை. ஆகவே, தூய வாழ்க்கையையே வாழ்ந்தவரும் வாழ்நாளில் ஒருமுறைகூட திருடாதவருமாகிய ஒருவரைத் தாங்களே தேர்ந்தெடுத்து விதைக்கும்படி கூறுங்கள்'' என்று சொன்னான்.

அரசன் உடனே தயங்காமல், ''நமது முதலமைச்சர் தங்கத்தை விதைப்பார்'' என்று அறிவித்தான்.

அமைச்சர், ''ஐயோ! நான் விதைப்பதா? இல்லை, நான் தூய வாழ்க்கை வாழ்ந்தவன் என்று சொல்வதற்கில்லை'' என்று சொல்லிக்கொண்டே பின்வாங்கினார்!

அரசன் இதை எதிர்பார்க்கவில்லை. என்றாலும் சமாளித்துக்கொண்டு, ''அமைச்சர் விதைக்காவிட்டால் நமது மதிப்பிற்குரிய நீதிபதி அவர்கள் தங்கத்தை விதைக்கட்டும்'' என்று சொன்னான்.

நீதிபதி, ''நான் தங்கத்தை விதைப்பதா? இல்லை, நான் அதற்கு தகுதி பெற்றவன் இல்லை'' என்று சொல்லி அவரும் மறுத்து விட்டார்.

அரசன் நீதிபதிக்கு அடுத்து இருந்த நகராண்மைக் கழகத் தலைவரைப் பார்த்து, ''நீங்கள் தங்கத்தை விதையுங்கள்'' என்றான்.

நகராண்மைக் கழகத் தலைவர் தலையைக் கவிழ்த்துக் கொண்டு, ''இல்லை அரசரே! நான் அதற்குப் பொருத்தமானவன் இல்லை'' என்று சொல்லி விட்டார்.

அரசனுக்கு மதகுரு ஒருவர் இருந்தார். அரசன் அவரிடம் தங்கத்தை விதைக்கும்படி சொன்னான். மதகுருவும், தாம் விதைக்கும் நிலையில் இல்லை என்று சொல்லி விட்டார்.

மதகுருவும் மறுத்து விட்ட பிறகு, அரசனுக்கு யாரை விதைக்கச் சொல்வது என்றே புரியவில்லை. பிறகு அரண்மனை அதிகாரிகள் அத்தனை பேரையும் ஒவ்வொருவராக வரவழைத்து அரசன் விதைக்கும்படி சொன்னான். அதனாலும் எதிர்பார்த்த பலன் விளையவில்லை. ஒவ்வொருவரும் மறுத்து விட்டார்கள்.

அரசன் என்ன செய்வது என்று விழித்துக்கொண்டு இருந்தான். அப்போது அரண்மனை அதிகாரிகள் குழுமியிருந்த கூட்டத்தில் ஏதோ சலசலப்பு சப்தம் கேட்டது. அரசன் அந்தக் கூட்டத்திலிருந்த ஒருவரை அழைத்து, ''அதிகாரிகள் என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள்?'' என்று கேட்டான்.

''அரசரே தங்கத்தை விதைக்க வேண்டும் என்று பேசிக் கொண்டார்கள்'' என்று அந்த அதிகாரி பணிவுடன் சொன்னான். அரசன் வெட்கத்துடன், ''சரியாகப் போயிற்று! என்னால் இந்தக் காரியம் கெட்டுவிடுமோ என்று எனக்குப் பயமாக இருக்கிறது'' என்று சொன்னான்.

அரசன் இப்படிச் சொன்னதும், நடப்பதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த குற்றவாளி, ''அரசரே! என்ன விஷயம்? உங்களுடைய அரண்மனையில் தூய வாழ்க்கை வாழ்பவர், திருடாதவர் என்று ஒரே ஒருவர்கூட கிடையாதா? இப்படிப்பட்ட இவர்களை எல்லாம் அரண்மனையில் தங்கள் கூடவே வைத்துக் கொண்டு, அப்பாவியான என்னை திருடன் என்று சொல்லித் தூக்கில் போட ஆணையிட்டீர்களே, இதில் என்ன நியாயம் இருக்கிறது'' என்று கேட்டான்.



மதம் இல்லாமல் மனிதன் உயிர் வாழ முடியாது.

—காந்தியடிகள்

மனித சமூகம் மதிக்காதிருந்த போதும் மனம் மாறாதிருப்பதே மாட்சி.

—கன்பூஷியஸ்

# ஆன்மீக வாழ்க்கை

**சுவாமி அபேதானந்தர்**

உறுதியான, அசைக்க முடியாத கடவுள் நம்பிக்கையையும் பக்தியையும் நீ பெற விரும்பினுல் தவம் பழக முன்வர வேண்டும். கடுமையான தவ வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்.

தவம் என்பது, குறிப்பிட்ட நோக்கம் எதுவும் இல்லாமல் இங்கும் அங்குமாக இஷ்டப்படி எல்லாம் சுற்றித் திரிந்து கொண்டிருப்பதல்ல. ஒழுங்காகவும், நிலைத்த நிலையில் இருந்து வழுவாமலும் ஜபம், தியானம், தன்னடக்கம் ஆகியவைகளைப் பழகுவதுதான் உண்மையான தவம் ஆகும்.



சுவாமி அபேதானந்தர்

பக்தியும் நம்பிக்கையும் வேண்டும் என்று இறைவனிடம் மனதாரப் பிரார்த்தனை செய்தால், அவைகளை நிச்சயமாக அவர் அளித்தருளுகிறுர். ஆகவே, பின்வருமாறு பிரார்த்தனை செய்து வா: ''பகவானே, கிருபைகூர்ந்து எனக்கு அருள் புரியத் திருவுள்ளம் கொள்ளுவீராக. குன்றாத, மாறாத பக்தியையும் அசைக்க முடியாத நம்பிக்கையையும் எனக்குத் தந்தருள்வீராக. என்னுடைய மனமும் இதயமும், எப்போதும் உம்முடைய தாமரைத் திருவடிகளையே நாடி நிற்பனவாகுக! உம்முடைய திருவடிகளைத் தவிர்த்து, வேறு எந்த திசையை நோக்கியும் அவை செல்லாமல் இருப்பனவாகுக!'' — என்னும் விதத்தில் பிரார்த்தனைகளைச் செய்.

நாம் எதைத் தேடுகிறேமோ அதுவே நமக்குக் கிடைக்கும். இப்போது உனக்குக் கிடைத்திருப்பது, நீ விரும்பி வேண்டியது எதுவோ அதுவே ஆகும். எப்போது நீ உண்மையாகவே இறைவனுக்காக ஆவல் கொள்கிருயோ, அப்போது ஆண்டவன் உலகப் பொருள்களில் இருந்தும் உன்னுடைய உள்ளத்தைவிடுத்து உயர்த்தி, தமது காட்சியை அருள்வார்.

ஆனுல் நீ உலகத்தின் மீது பற்றுள்ளவனுக இருக்கும் வரையிலும், உலக விஷயங்களையே நாடும் ஆவல் உன்னிடம் மிகுந்து இருக்கும் வரையிலும், கடவுளுக்காக முழு உள்ளத்துடன் அருள் தாகம் கொள்வது உனக்குச் சாத்தியமாகுமா என்ன?

பூனைக்குட்டிகள் தாய்ப் பூனையைக் கூவி அழைப்பதைப் போல, கடவுளைக் கூவி அழைப்பவனுக இருப்பதற்குப் பழகி வா. ஜகன்மாதா உன்னை எந்த இடத்தில் எந்த நிலையில் வைக்கிருளோ, அங்கேயே இன்பமாகவும் திருப்தியாகவும் இருந்து வா. ஜகன்மாதாவின் சித்தத்திற்கேற்ப, முழு அளவில் இணங்கி நடப்பதே நமது கடமை ஆகும். எந்தவித முரண்படுகிற கருத்தையும் கொள்ளாமல், இறைவனுடன் எப்போதும் முழு அளவில் இணைந்தவர்களாக இருக்க வேண்டும். தூய்மையானதாகவும் முழு அளவினதாகவும் உள்ள ஒருமுகப்பட்ட கடவுள் பக்தியை நீ வளர்த்துக்கொள்ள வேண்டும்.

உள்ளத்தில் அமைதியும் திருப்தியும் இல்லாவிட்டால், எங்கே சென்றுலும் அமைதியின்மையும் துன்பமுமே காணப்படும். உன்னுடைய விவேகத்தைக் கொண்டு உனது உள்ளத்தைச் சுற்றிலும் ஒரு மதில் சுவரை எழுப்பிக்கொள். மனதைக் குழப்பும் புற நிகழ்ச்சிகளை உன்னுடைய உள்ளத்தில் நுழைய அனுமதிக்காதே — இதுவே ஆத்ம சாதனை என்பதைப் புரிந்துகொள்.

உன்னுடைய உள்ளத்துக்கு மிகவும் பொருத்தமாக உள்ள எந்த ஓர் இடத்தையும் நீ உலகிலே பார்க்கவே முடியாது. சாதகமாக இல்லாத சூழ்நிலைகளை சாதகமானவைகளாக மாற்றுவதற்குக் கற்றுக்கொள். மனம்தான் எல்லாமாக இருக்கிறது. மனதைக் காதுகளில் இருந்து உள்ளிழுத்துக் கொண்டால், வண்டியில் பிரயாணம் செய்யும்போது வண்டி போகும் சப்தம்கூட உனக்குக் கேட்காது. சுக்கானின் பிடியை உறுதியாகப் பற்றி இருப்பதைப் போல, உனது உள்ளத்தை விழிப்பாக வைத்திருந்து கடவுளிடம் பிரார்த்தனை செய். அவரே நமக்குத் துணைவராக இருக்கிருர். அவரே நமது வாழ்க்கைக்கு ஆதாரமாக விளங்கிருர்.



# ஆண்டாள் காணும் கண்ணபிரான்

ர. வேங்கடரத்தினம்

ஆண்டாள் கண்ணனே வாயாரப் பாடிப் புகழ்ந்து நெஞ்சு நிறைந்து நிற்பவள். கண்ண னைக் கண் எதிரே காணும் களிப்பில் ஆழ்ந்து, கவி பாடுபவள் கோதைப் பிராட்டி. அவளுக்கு ஐயன், இளமைத் திருக்கோலத்திலே என்றும் காட்சி தருவான்.

கிருஷ்ணனின் துள்ளும் இளமை நாச்சியார் வாக்கில் வார்த்தைக்கு வார்த்தை, சிந்தித் தெறிக்கும். எடுத்த எடுப்பில் முதல் திருப் பாவையிலேயே, கண்ணனே அவள் நந்தகோ பன் **குமரன்,** யசோதை **இளம்** சிங்கம் எனத் தொடங்கி அறிமுகம் செய்வாள், கண் உறங் கும் பிற மகளிர்க்கு!

அடுத்து, மாயனே மன்னு வடமதுரை **மைந் தன்** எனச் செப்புவாள். என்றுமே கண்ண பெருமான் வடமதுரையம்பதி தந்த பாலனு கவே பக்தர் உள்ளத்தே விளங்குபவன். ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கென்று ஆண்டாள் கண்ணனேப் பேசுகையில், தோன் றிய அணி விளக்கெனக் கூறிக் கிருஷ்ணனேக் கடந்த காலப் பழங்கதையாக்காது, நித்தம் ஆண்டிற்கொரு முறை கோகுலாஷ்டமிப் புனித நாளில் தோன்றிக்கொண்டே இருக்கிற நிரந் தரச் சுடரொளியாக நம் உள்ளத்தில் கண்ணனே உறையச் செய்வாள். இருளே அகற்ற வந்த தெய்வீகச் சுடரொளிதான் கிருஷ்ணனின் திரு அவதாரம் என்பதைப் பாவைப் பிரபந்தத்தில் ஆண்டாள் ஆங்காங்குக் குறிப்புக் காட்டுவாள். கண்ணனே

**உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே**

என்று அழைத்து உள்ளம் உகப்பாள். அணி விளக்கு ஆன எம்பெருமான் சுடராய் ஜொலிக் கிருன் ஒரு புறம்; எனின் மறுபுறம் வெம்மை யாய்க் கொளுத்துகிருன். சுடருக்கு ஒளி உண்டு; சுட்டுப் பொசுக்கும் சூடும் உண்டு. இந்த இரு தன்மைகளேயும் நாச்சியார் கண்ண பெருமானிடம் காண்பாள். தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனேத் தூமலர்த் தூவித் தொழுது வாயினுல் பாடி மனத்தினுல் சிந்திக்கத் **தீயினில் தூசு ஆகும்,** பழைய புதிய பாவம் யாவும்! பாவங்களேச் சுட்டுப் பொசுக்கு வான் பரமன்.

இத்தகைய பரமனேப் பகையெனக் கொண்டு தீய எண்ணங்களுக்கு மனதில் இடம் தந்து, பரந்தாமனேயே ஒழிக்க எண்ணி இறுதியில் அழிந்தவன் கம்சன். அவன் அழிந்த கதையை ஆண்டாள் எளிதில் கூறி விடுவாள். கம்சனுக்கு ஒரு தீயாக இருந்த நெடுமாலே என்று கண்ண னேப் பிராட்டி அழைப்பாள்.

கண்ணன் தங்கள் குலத்தில் வந்து பிறந் தமை பற்றி ஆயர்பாடிச் சிறுமியர்க்குப் பெருமை உண்டு. மாடு மேய்க்கும் மக்களின் இடையே, எங்களோடு ஒருவனுக வந்து தோன்றிய பின், எங்களுடைய குற்றேவல் ஏற்காதிருத்தல் சரியல்ல.

பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில்
பிறந்து நீ
குற்றேவல் எங்களேக் கொள்ளாமல்
போகாது.

கோகுலத்து மகளிர், கண்ணனிடம் தனி உறவு கொண்டாடி அகமகிழ்பவர்கள். இதுவும் கூட, இந்த ஒரு பிறப்போடு அவிழும் பந்தமல்ல என்று ஆண்டாள் வலியுறுத்திச் சொல்வாள்.

எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்
தன்னேடு
உற்ருேமே ஆவோம்; உனக்கே நாம் ஆட்
செய்வோம்.

திருமாலின் எந்தத் திரு அவதாரத்திலும் தமக்கு ஈசனேடு பிணேயல் உண்டு என்று ஆண் டாள் கூறுவாள். ஈசனே விடுத்து, விலகி நிற்க அடியவர் உள்ளம் உடன்படாது.

அறிவொன்றும் இல்லாத
ஆய்க்குலத்து உன்தன்னே
பிறவி பெறுந்தனே
புண்ணியம் யாம் உடையோம்
குறைவொன்றும் இல்லாத
கோவிந்தா! உன்தன்னேடு
உறவேல் நமக்கிங்
கொழிக்க ஒழியாது.

இறைப் பந்தம் என்றுமே தீராத இணேப்பு என்று நாச்சியார் திருமொழியில், ஆண்டாள் கனுக் காணும் பாசுரமும் பகரும்.

இம்மைக்கும் ஏழ் ஏழ்
பிறவிக்கும் பற்ருவான்
நம்மை உடையவன்
நாராயணன் நம்பி
செம்மை உடைய
திருக்கையால் தாள் பற்றி
அம்மி மிதிக்கக்
கனக் கண்டேன் தோழீநான்.



ஆண்டாளோ எம்பெருமான் மீது உடல், பொருள், உள்ளம் அனைத்தையும் செலுத்தி இறை வழிபாட்டிலேயே உள்ளம் உகப்பவள். அவளுடைய நெஞ்சகத்திலே மனிதரில் எவரும் புகுந்து இடம் பெற முடியாது. திருமேனியில் சங்கு-சக்கரம் பற்றி நிற்கும் சர்வேசுவரன் ஆகிய புருஷோத்தமன் மட்டுமே நாச்சியார் நெஞ்சில் நிற்பவன் ஆவான்!

மானிடவர்க் கென்று
பேச்சுப் படில்
வாழ கில்லேன்
கண்டாய் மன்மதனே.

ஆண்டாளின் உள்ளம் கண்ணனின் திவ்விய நினைவில் நிறைந்து நிற்பது. மானிட வாடையே ஆங்கு வீசுதல் ஆகாது. மன்மதனின் கொட்டமெல்லாம் நடவாது நாச்சியாரிடம்.

சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணனைப் பாடேலோ ரெம்
பாவாய்.

என்று அவள் ஊர்ச் சிறுமியரை எழுப்பிக் கண்ணன் புகழ்பாடி மகிழ்பவள். பாற்கடலுள் பையத் துயின்ற பரமன் அடி பாடியாடி அகம் குளிரும் ஆயர்பாடிக் கன்னியரின் தலைவி கோதை. அவளுக்கு

**மாமாயன், மாதவன், வைகுந்தன்**

என்றென்று நாமம் பலவும் நவிலல் இனிய ஒரு பொழுதுபோக்கு! முகில்வண்ணனின் வீர சரிதங்களைப் பாடிப் பரந்தாமன் மீது தன் ஒத்தவர் இதயங்களைப் பாய்ச்சிப் பக்தி இயக்கத்திற்கு வித்திட்ட நங்கை ஆண்டாள். கிருஷ்ண பகவானிலும், அவள் உள்ளம் உகப்பது சின்னஞ்சிறு பிராயத்துக் குழந்தைக் கண்ணனே யாகும்.



மன்னிப்பு எனது தாய், திருப்தி என்னுடைய தந்தை. உண்மை எனது மாமன், அன்பு என்னுடைய தம்பி; பிரியம் எனது அம்மான் குழந்தை, பொறுமை என்னுடைய மகள். இவர்களே எனது உறவினர்கள். சாந்தி என்னைவிட்டுப் பிரியாத தோழி, புத்தி என்னுடைய வேலைக்காரி, இவர்களே எனது குடும்பத்தினரும் துணைவருமாக இருக்கிறார்கள். உலகம் முழுவதையும் படைத்த ஒருவனாகிய இறைவன் எனது நாயகன். அவனைக் கைவிடுபவன் பிறப்பிறப்புச் சுழலில் அகப்பட்டுப் பலவகைகளிலும் துன்பப்படுவான்.

ஆண்டவனின் நாமத்தை ஓதி வா. ஆண்டவனின் மீது அன்பு செலுத்து. ஒரு தெய்வத்தையே உறுதியாகப் பற்றியிரு. மக்களுக்குத் தொண்டு செய்து வா. இறைவனே எல்லாமுமாக இருக்கிறார். அவரையே எப்போதும் புகழ வேண்டும். அவரிடம் பிரார்த்தனை செய்வாயாக. அவரோடு இரண்டறக் கலந்து இன்புறுவாயாக.

—குருநானக்





# மனிதன் தனது விதியைத் தானே அமைக்கிறான்

சுவாமி விவேகானந்தர்

## 20

ஒவ்வொரு ஜீவான்மாவிலும் தெய்வீகத் தன்மை மறைந்திருக்கிறது. வெளியேயும் உள்ளேயும் இருக்கும் இயற்கையைக் கட்டுப் படுத்தி, உள்ளே குடிகொண்டுள்ள இந்தத் தெய்வீகத் தன்மையை மலரும்படி செய்வது தான் முடிவான இலட்சியமாகும்.

இதைக் கர்மயோகம், கடவுள் வழிபாடு, மனக் கட்டுப்பாடு, தத்துவ விசாரம்—என்னும் இவைகளுள் ஒன்றினாலோ, பலவற்றினாலோ, எல்லாவற்றினாலோ செய்து சாதித்துச் சுதந் திரமாய் இரு.

இதுவே சமயத்தின் முழு உண்மை ஆகும். சமய சித்தாந்தங்களோ, ஆகமக் கட்டுப்பாடு களோ, சமய சடங்குகளோ, சாஸ்திரங்களோ, கோவில்களோ, அவை போன்ற மற்றவை களோ, இதற்கு உதவி புரியும் இரண்டாம்தர மான முக்கியத்துவமுடைய சாதனங்களாக மட்டுமே அமைந்திருக்கின்றன.

## 21

ஒவ்வொருவனும் தன்னுடைய வழிதான் சிறந்தது என்று நினைக்கிறான். மிகவும் நல்லது. ஆனால் உனக்கு வேண்டுமானால் அது நல்லதாக இருக்கலாம் என்பதை நீ நினைவில் வைக்க வேண்டும். ஒருவனால் சிறிதுகூட ஜீரணிக்க முடி யாத ஓர் உணவு, மற்றொருவனுக்கு எளிதில் ஜீரணமாகக் கூடியதாக இருக்கும். உனக்குப் பொருத்தமாக இருப்பதாலேயே ஒவ்வொரு வனுக்கும் அதுதான் வழி, சங்கரனுக்குப் பொருத்தமான சட்டை சந்திரனுக்கும் சங்கரிக் கும் பொருத்தமாக இருக்க வேண்டும் — என்ற முடிவிற்குத் தாவிவிடாதே. கல்வியறிவில்லாத, பண்பாடற்ற, சிந்தனையில்லாத ஆண், பெண் அனைவரும் இத்தகைய குறுகலான சட்டைக்குள் புகுத்தப்பட்டிருக்கிறார்கள்!

நீயாகவே சிந்தித்துப் பார். நாத்திகனாய் இருந்துவிட்டுப் போ! இந்த உலகமே பெரிது என்று நினைக்கும் இலௌகிகனாக இருந்துவிட் டுப் போ! அதுகூட எவ்வளவோ பரவா யில்லை! மனதைப் பயன்படுத்திச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்! இந்த மனிதனுடைய வழி தவறானது என்று சொல்வதற்கு உனக்கு என்ன உரிமை இருக்கிறது? உனக்கு வேண்டுமானால் அது தவறாக இருக்கலாம். அதாவது, நீ அந்த வழியைப் பின்பற்றினால் அதனால் உனக்குக் கேடு விளையக்கூடும். ஆனால் அதற்காக அந்த வழியால் அவன் கீழ்நிலையை அடைந்து விடுவான் என்பது அதன் பொருளல்ல.

எனவே, உன்னிடம் அறிவு இருந்து, மற் றொருவன் பலவீனனாக இருப்பதை நீ பார்த் தால், அதற்காக அவனை நீ கண்டிக்காதே! உனக்கு இயலுமானால் அவனுடைய நிலைக்கு இறங்கிச் சென்று அவனுக்கு நீ உதவி செய். தானாகவே அவன் வளர்ச்சி பெற வேண்டும். நான் அவனுடைய தலைக்குள் ஐந்து மணி நேரத்தில் ஐந்து கூடை அறிவைத் திணித்து விடுவேன். ஆனால், அதனால் என்ன நன்மை ஏற்பட்டுவிடப் போகிறது?. அவன் முன்பு இருந்ததைவிட மேலும் சற்று அதிகம் மோச மானவனாகத்தான் இருப்பான்.

## 22

''எழுந்திருங்கள், விழித்துக்கொள் ளுங்கள், இனியும் தூங்க வேண்டாம். எல் லாத் தேவைகளையும் எல்லாத் துன்பங்களையும் நீக்குவதற்கான பேராற்றல் உங்கள் ஒவ் வொருவருக்குள்ளேயும் இருக்கிறது. இதை நம்புங்கள், அப்போது அந்தப் பெரிய சக்தி உங்களிடமிருந்து வெளிப்படும்'' என்ற இந்த உண்மையை அனைவருக்கும் சென்று போதிப் பாயாக.... எல்லையற்ற வலிமையும், எல்லை யற்ற ஞானமும், வெல்ல முடியாத ஆற்றலும் உனக்குள்ளேயே குடிகொண்டிருப்பதை நீ உணர முடிந்தால், நீ அந்த ஆற்றலை வெளியே கொண்டு வர முடியுமானால், நீயும் என்னைப் போல் ஆக முடியும்.



# ஒரு சிறப்பான வாழ்க்கை முறை

ஜெயகாந்தன்

கங்கைக் கரையில் அன்னசாலை ஒன்று நிறுவ வேண்டுமாம். பசித்தவர்களெல்லாம் அங்கு வந்து மிருந்த மரியாதையோடு சொந்த வீட்டில் சாப்பிடுவதுபோல் விலை தராமல் சாப்பிட வேண்டுமாம். அங்கு வந்து புசிப்பவர்களின் அளவைச் சாப்பிட்டவர்களின் தொகையை வைத்துக் கணக்கிட முடியாதாம்.



அவர்கள் சாப்பிட்ட உணவினை வைத்தும் கணக்கிட ஏலாதாம். அவர்களுக்காகச் சமைத்த சாதத்தை வடித்த கஞ்சி அந்த அகண்ட கங்கையின் செந்நிறமான பிரவாகத்தில் கலந்து அதை வெண்ணிறமாக மாற்ற வேண்டுமாம். அந்த அளவுக்கு....

—இப்படி ஆசைப்பட்டவன் யார் தெரியுமா? கையிலே திருவோடு ஏந்திய காவி தரித்த ஒரு சன்னியாசி. அந்த ஆசையும் அந்த ஆற்றலும் ஒரு சன்னியாசிக்கே சாத்தியம்.

பசியும் வறுமையும் அவரவர்கள் கர்மபலன் என்று சமயமும் சன்னியாசிகளும் சொல்லிக் கொண்டிருந்தபோது, 'பசித்தவனுக்குச் சோறு தர முடியாத சமயம், இறந்தவனுக்கு மோட்சம் தராது' என்று சொன்ன சன்னியாசி அல்லவா **சுவாமி விவேகானந்தர்!**

மக்களின் வறுமையும் பசியும் போக ஏதாவது செய்யவேண்டியது அரசாங்கத்தின் பணி என்று எல்லாரும் தீர்மானம் போட்டுக் கொண்டிருந்த ஒரு காலத்தில்—

'நீங்கள் என்ன, எப்போது பார்த்தாலும் யாரையாவது ஏதாவது கேட்டுக்கொண்டே இருக்கிறீர்கள்!—நாம் வெள்ளைக்காரர்களுக்கு ஏதாவது தரவேண்டும். முதலில் நாம் இங்குள்ள மக்களுக்கெல்லாம் அன்னமிட வேண்டும். இந்த அற்புதத்தை நானே செய்வேன்' என்று காரியத்தில் இறங்கியவர் அந்தச் சன்னியாசி!

இதற்கெல்லாம் என்ன பொருள்?

அதிகாரத்திற்கும், அரசியலுக்கும் போகிறவர்கள் சன்னியாசிகளாக இருக்க வேண்டும் என்பதே. தன்னினம், தன் மொழி, தன் குலம், தன் வீடு, தன் நலம், தன் பசி என்கிற தன்மைகளைத் துறந்தவர்கள்தான் பிறருக்குத் தொண்டு செய்ய முடியும்; பிறர் துயர் காணவும் முடியும்; தீர்க்கவும் முடியும்.

சன்னியாசம் என்பது வேஷமோ, வெறும் பேச்சோ அல்ல. அது **ஒரு சிறப்பான வாழ்க்கை முறை.** சன்னியாசிக்கு வாழ்க்கை கற்பனை அல்ல; வெறும் ஆசைகளின் உழலல் அல்ல. எனவே, விவேகானந்தர் பசித்தவர்களுக்கு அன்னமிடத் திட்டமிட்டது நாம் போடுகிற திட்டங்கள் போன்ற கற்பனையல்ல.

நோயாளிகளுக்கு மருத்துவன் எவ்வளவு முக்கியமான தேவையோ, அவ்வளவு முக்கியமான தேவை—சம்சாரிகளுக்கு சன்னியாசிகளின் உதவி.

இந்த மண்ணில் அரசு புரிந்த ஜனகனும், அசோகனும், அக்பரும்—ஏன்? அரசியல், சமூக ஞானிகளான சாக்ரட்டீஸும், காந்தியும் அப்படிப்பட்ட சன்னியாசிகளே ஆவர்.

இவர்களில் யாருக்கும் தனி உடைமை உரிமையின் பேரால் சொத்துக்கள் சேர்ந்தது இல்லை. இதுவே சன்னியாசத்தின் அடிப்படை!

இப்படிப்பட்ட சன்னியாசிகளுக்கும் அரசியலுக்கும் சம்பந்தமிருக்கக் கூடாது என்கிற மனோபாவத்தையும் நாம் எப்படியோ உருவாக்கி விட்டிருக்கிறோம். அதன் எதிர்மறை விளைவுகள் கருதி அந்த சன்னியாசிகள் மௌனமாகி விடுகிறார்கள். நஷ்டம் யாருக்கு?

சரி, போகட்டும். இதற்கெல்லாம் இன்னொரு புறம் உண்டு. அதையாவது பார்ப்போம். சன்னியாசிகள் அரசியலுக்கோ, நம்மை ஆளுகின்ற பொறுப்புக்கோ, அன்னமிடும் நற்பணிக்கோ வரவேண்டாம். ஆனால் இவற்றுக்கெல்லாம் வந்து விட்டவர்கள் சன்னியாசிகளாக மாறலாம் அல்லவா? அதற்கு என்ன தடை? எது தடை? அப்படி மாறவில்லையென்றால் அதன் மறு விளைவு என்ன? மக்கள் எல்லாவற்றின் மீதும் நம்பிக்கையை இழக்க நேர்கிறது. இந்த அவநம்பிக்கை எல்லா நாசங்களுக்கும் வித்தாகிறது.

சரி. இந்தச் சன்னியாசம் என்பதற்கு புது விளக்கம் என்ன? அது வாழ்க்கையோடு சம்பந்தமற்ற 'ஆன்மீகம்' என்ற மயக்கமோ கற்பனையோ அல்ல.

ஆனாலும் அதிகாரத்திற்குப் போகிறவர்கள்—அவர்கள் எப்படிப் போயிருந்த போதிலும் சரியே—அவர்கள் சன்னியாசத்தை மேற்கொள்ள வேண்டும் என்றாகிறது.



# ஒரு காலம் வரும்!

பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

நம்மிடம் உள்ள குறைபாடுகளை நினைத்து, 'நாம் இப்படியேதான் இருந்து ஒழியப் போகிறோம்' என்று எண்ணிச் சோர்ந்து போகக் கூடாது.

பாவிகள், பாவிகளாகவே கடைசி வரையிலும் இருந்தாக வேண்டும் என்று விதி ஒன்றும் இல்லை. சொல்லப்போனால், பாவிகளும் ஒரு சமயம் இல்லாவிட்டால் ஒரு சமயம் புனிதவான்கள் ஆவார்கள் என்பதுதான் தெய்வ விதியாக இருந்து வருகிறது.



மகான்களும் ஒரு காலத்தில் பாவிகளாக இருந்தவர்களே; பாவிகளும் ஒரு காலத்தில் மகானின் நிலையைப் பெறப் போகிறவர்களே ஆவர்.

'திருந்திய வாழ்க்கை மருந்தினும் இனிது' என்று சொல்வார்கள். குற்றங்குறைகளுடன் வாழ்ந்த பலர், வாழ்க்கையில் திருந்தியவர்களாகவும் மகானின் நிலையை அடைந்தவர்களாகவும் விளங்கியதற்கு வரலாற்றில் ஏராளமான சான்றுகள் உண்டு.

இராமாயணம் இயற்றிய வால்மீகி, ஸ்ரீகிருஷ்ண கர்ணாமிர்தம் எழுதிய லீலாசுகர், துளசிதாசர், திருமங்கையாழ்வார், இஸ்லாமிய துறவி பூதயால் அடிகள், சமீப காலத்தில் வாழ்ந்த ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடராகிய கிரீஷ் சந்திரகோஷ் என்ற வரிசையில் உள்ள பலரும் ஆரம்ப காலத்தில் சான்றோர்களாக வாழ்ந்தவர்கள் அல்லர். ஆனால், தங்கள் வாழ்க்கையில் திருந்தப் பெற்று மனித குலத்துக்கே வழி காட்டக்கூடிய மகான்களாகப் பிற்காலத்தில் விளங்கி இருக்கிறார்கள்.

**அபரோ மிகப்பெரிய முரடனாக இருந்தான். ஒரு காலம் வந்தபோது, மகானாக உயர்ந்து விட்டான்.**

ஓர் ஆறு காட்டாற்று வெள்ளமாகப் பெருகி ஓடுகிறது. அந்த வெள்ளம் ஊரையும் பயிர்களையும் அழித்துவிடக் கூடியது. ஆனால் அதே ஆற்று வெள்ளத்தை அணை அமைத்துப் பயன்படுத்தினால், ஆக்கபூர்வமான வகையிலே மக்களுக்கும், பயிர்த் தொழிலுக்கும், மற்றும் பிற வகைகளிலும் பயன்படுத்த முடியும்.

அதைப்போலவே, ஒரு மனிதன் தன்னிடம் உள்ள இயல்புகளையும் ஆற்றல்களையும் காட்டாற்று வெள்ளம் போல அழிவு வேலைகளுக்குப் பயன்படுத்தி தன்னைத் தானே அழித்துக் கொள்ளவும் முடியும். அணை அமைத்து ஆக்க வேலைகளுக்குப். பயன்படுத்தப்படும் வெள்ளம் போலவும் தனது ஆற்றல்களைப் பயன்படுத்தி மேலான நிலையைப் பெறவும் முடியும்.

ஃ ஃ ஃ

ஓர் ஊரிலே அபரோ (offero) என்ற ஒரு பையன் இருந்தான். அவன் மிகவும் முரடன். பயம் என்பதே அவனுக்குத் தெரியாது. ஊரில் பையன்களுக்கிடையில் சண்டை, விளையாட்டுப் போட்டி என்று எது வந்தாலும், எப்போதும் அங்கே அபரோதான் முதலாவதாக நிற்பான். அவனுடைய முரட்டுதனத்திற்கு ஏற்ற வகையிலே, அவனது உடல் உறுதியாகவும் நல்ல உயரமாகவும் இருந்தது.

அபரோ வளர்ந்தான். பெரியவன் ஆனான். அவனுடைய உடலையும் விஞ்சும் வகையில் முரட்டுத்தனங்களும் அவனோடு போட்டி போட்டுக் கொண்டு வளர்ந்தன. அவனது அகராதியில் பயம் என்னும் பேச்சுக்கே இடம் இல்லை.

அபரோவின் முரட்டுத்தனம் ஊரிலேயே பிர சித்தமானது. அழுத குழந்தையும்கூட, அவனது பெயரைக் கேட்டால் வாய் மூட வேண்டியது தான்!

அபரோவின் முரட்டுத்தனத்துக்கு ஊரில் உள்ள வம்புகள் போதவில்லை. அவனுக்கு, தன்னுடைய முரட்டுத்தனம் முழுவதையும் வெளிப் படுத்தும் வகையில் பெரிய காரியம் ஒன்றைச் செய்து காட்ட வேண்டும் என்ற அரிப்பு இருந்து கொண்டிருந்தது.

யைப் போல அடையாளம் செய்து கொண்டான். அரசனின் இந்தச் செயலை அபரோ கவனித்தான். ஆகவே, அரசனே பயப்படும் சாத்தானைத்தான் நாம் சென்று சந்திக்க வேண்டும் என்று அபரோ முடிவு செய்தான்.

அவன் வீராவேசத்துடன் சாத்தானின் தர்பாரை அடைந்தான். (அபரோ சாத்தானின் தர்பாரை எப்படி அடைந்தான் என்பது தெளிவாகத் தெரியவில்லை.) சாத்தானின் ஜாதகமும் அபரோவின் ஜாதகமும் கனகச்சிதமாகப்




ஆகவே, அபரோ ஒரு நாள் கையிலே பட்டைத் தீட்டப்பட்ட ஒரு பெரிய வாளை எடுத்துக் கொண்டான். நேராக ஒரு பேரரசனின் அரண்மனையை அடைந்தான்.

அபரோ அரசனைச் சந்தித்தான். பேரரசன் 'சாத்தான்' என்ற பெயரைக் கேட்டாலே நடுங்கியபடி, முகத்திலும் மார்பிலும் சிலுவை

பொருந்தி இருந்தன போலும்! இருவரும் வெகு விரைவிலேயே நண்பர்கள் ஆகிவிட்டார்கள்! அபரோவின் முரட்டுத்தனம் இப்போது மது அருந்திய குரங்காகி விட்டது.

ஒரு நாள் அபரோவும் சாத்தானும் உலாவி வருவதற்காக ஒரு பாதை வழியாகச் சென்று கொண்டிருந்தார்கள். அப்போது வழியிலே

மரத்தால் செய்யப்பட்ட ஒரு சிலுவை இருந்தது.

இதைச் சாத்தான் பார்த்தானோ இல்லையோ, அப்படியே அவன் நடுநடுங்கிப் போய்விட்டான். பீதி அவனைக் கவ்விக் கொள்ள, பேயறைந்தவனைப் போல தலைதெறிக்க ஓடினான்.

அபரோவுக்குச் சாத்தானின் செய்கை புரியவில்லை. 'மன்னன் உட்பட மக்கள் அனைவருமே சாத்தானின் பெயரைக் கேட்டு அல்லவா நடுங்குகிறார்கள்? அப்படி இருக்கும்போது, போயும் போயும் சாத்தான் ஒரு அற்ப மரத்துண்டைப் பார்த்து நடுங்குகிறான் என்றால், அதற்கு என்னதான் அர்த்தம்?' என்ற சிந்தனை அபரோவின் உள்ளத்தில் எழுந்தது.

அவன் சாத்தானைத் தொடர்ந்து சென்று, ''ஐயா! உலகமே உங்களைப் பார்த்து அஞ்சி நடுங்குகிறது. அப்படிப்பட்ட நீங்கள், கேவலம் ஒரு மரத்துண்டைப் பார்த்து மிரண்டு ஓட வேண்டிய அவசியம்தான் என்ன? உங்களுடைய வீரம் இவ்வளவுதானா?'' என்று கேட்டான்.

அதற்குப் பதிலாக சாத்தான், ''அபரோ! இந்த உலகிலேயே என்னுடைய வீரத்திற்கு இணை என்னுடைய வீரமேதான். நீ நினைப்பதைப் போல நான் ஓர் அற்ப மரத்துண்டாகிய சிலுவையைப் பார்த்துப் பயந்து போய்விடவில்லை. ஆனால், அந்தச் சிலுவையிலே ஒரு காலத்திலே ஒருவன் தொங்கினானே, அவனை நினைத்தால்தானப்பா எனது குடலெல்லாம் நடுநடுங்கி ஆட்டம் கொடுக்கிறது! அந்த மரத்துண்டுக்கு நான் அஞ்சவில்லை. அதில் ஒரு நாள் தொங்கியவனுக்கே பயப்படுகிறேன்'' என்று சொன்னான்.

சாத்தான் பயந்தது, அவன் சொன்னது, எல்லாமே அபரோவுக்கு வேடிக்கையாகவும் அதே சமயத்தில் புதிராகவும் இருந்தன. 'பயமே அறியாத நான், இந்தப் பயந்தாங்கொள்ளி சாத்தானுடன் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது' என்ற முடிவுக்கு அபரோ வந்தான்.

அகவே அவன் சாத்தானிடம், ''நீ யாரை நினைத்தாலே நடுங்கிப் போகிறாயோ, அந்தச் சிலுவையில் தொங்கியவனையே நான் சந்தித்துப் பார்த்து விடுகிறேன்'' என்று சொல்லியபடி சாத்தனைவிட்டுப் பிரிந்து சென்றான்.

அபரோ பல இடங்களிலும் சுற்றினான். அலைந்தான்.

ஒரு நாள் அவன் கிறிஸ்தவத் துறவி ஒருவரைச் சந்தித்தான். அந்த முனிவருக்கு அபரோவைப் பார்த்ததும் என்ன தோன்றியதோ, அவர் அவனிடம் அவனுடைய வரலாற்றைச் சொல்லும்படி கேட்டார்.

அபரோ தன்னுடைய கதையை விளக்கமாகச் சொன்னான்.

முனிவர், சிலுவையில் தொங்கிய இயேசு பெருமானைப் பற்றி அபரோவுக்குச் சொல்ல ஆரம்பித்தார். அவர் சொல்லச் சொல்ல அபரோவின் இதயக் கதவு மெல்ல மெல்ல திறக்க ஆரம்பித்தது. முரடனாகிய அபரோவுக்கு மனித குலத்தின் இரட்சகராகிய கிறிஸ்து பகவானின் மீது ஒருவித அன்பு தோன்றியது.

முனிவர் இயேசு கிறிஸ்துவின் வரலாற்றைச் சொல்லி முடித்தார்.

உடனே அபரோ தனது வாளை விரைவாகச் சுழற்றி வானத்தை நோக்கி உயரப் பிடித்து ஒரு சபதம் செய்தான்: ''உலக இரட்சகரும், பரமபிதாவும், மனித குலத்தை உண்மையாகவே நேசித்தவருமாகிய இயேசு கிறிஸ்துவுக்கே இனி நான் தொண்டு செய்வேன்''.

அபரோ செய்த சபதத்தில்கூட, வழக்கப்படி அவனுடைய முரட்டுத்தனம்தான் தொனித்தது. இதைக் கவனித்த கிறிஸ்துவ துறவி, ''மகனே அபரோ! நமது பகவானாகிய இயேசு பெருமான் கத்தியை எடுத்துக்கொண்டு போய் சண்டை போட வேண்டும் என்று எப்போதுமே சொன்னதில்லை. அவர், பிறரிடம் அன்பு காட்டுவதாலும், மக்களுக்குத் தொண்டு செய்வதாலும், ஆண்டவனை வணங்குவதாலும் தான் தீமைகளை வெற்றி கொள்ளும்படி போதித்திருக்கிறார். இயேசு பெருமானின் வழியைப் பின்பற்றக் கத்தி தேவையில்லை. நல்ல இதயம் மட்டுமே வேண்டும்'' என்று சொன்னார்.

அபரோவின் ஓங்கியிருந்த வாள் கீழே தாழ்ந்தது. அவன், ''நீங்கள் சொல்வது சரிதான். ஆனால், கிறிஸ்து பெருமான் எனக்கு உறுதி வாய்ந்த உடலைக் கொடுத்திருப்பது அவருக்காக நான் போர் செய்ய வேண்டும் என்பதற்காக அல்லவா?'' என்று துறவியைக் கேட்டான்.

துறவி, ''இல்லை குழந்தாய். நீ நினைப்பதைப் போல அவருக்காகச் சண்டைப் போடுவதற்கு உறுதி வாய்ந்த உடலை உனக்கு அவர் கொடுக்க

வில்லை. ஆண்டவனை வணங்கவும், மற்றவர்களுக்கு உதவி செய்து வாழவுமே உறுதி வாய்ந்த உடலை உனக்கு அவர் கொடுத்திருக்கிறார். என்னுடன் வா; உனக்குப் பொருத்தமான வழியை நான் காட்டுகிறேன்'' என்று சொல்லி அபரோவை அவர் ஓர் ஆற்றின் கரைக்கு அழைத்துச் சென்றார்.

''அபரோ, இங்கே பார். ஆற்றிலே வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது. இந்த ஆற்றின் கரையிலேயே நீ ஒரு குடிசையை அமைத்துக் கொண்டு வாழ்ந்து வா. இந்த நதியைக் கடக்க விரும்பும் ஏழை எளிய மக்களை உனது தோளிலே சுமந்துபோய் மறுகரையில் இறக்கி விடு. உன்னுடைய உறுதி வாய்ந்த உடலுக்கேற்ற இந்தப் பணியை ஆண்டவனுக்குச் செய்யும் ஒரு வழிபாடாகவே நீ செய்து வர வேண்டும். அதோடு இயலும் போதெல்லாம் ஜபம், தியானம், பிரார்த்தனை ஆகியவைகளிலும் நீ ஈடுபட வேண்டும். இவைகளை நீ நாள்தோறும் தவறாமல் செய்வதால் ஆண்டவனுக்கு உன்மீது மிகுந்த மகிழ்ச்சி ஏற்படும்'' என்று துறவி அறிவுரை வழங்கிவிட்டுச் சென்றார்.

அபரோ, துறவி சொன்னபடியே தன்னுடைய வாழ்க்கையை அமைத்துக் கொண்டான். ஜபம், தியானம், பிரார்த்தனை ஆகிய ஆத்ம சாதனைகளைப் பழகினான். அதோடு, பிறவிக் கடலைத் தாண்டுவிக்கும் ஆண்டவனுக்கு, ஏழை எளிய மக்களை மறுகரைக்குத் தூக்கிப்போய் ஆற்றைத் தாண்டுவிக்கும் பணியை வழிபாடாக்கி வந்தான்.

இவ்விதம் சில காலம் கடந்தது.

ஒரு நாள் நள்ளிரவு நேரம். வழக்கம்போல் காரிருள் சூழ்ந்திருந்தது. ஆற்றிலே வெள்ளம் பொங்கிக் கொண்டிருந்தது. அப்போது மக்கள் சஞ்சாரமே இல்லை. அந்த நடு இரவில், ஓர் ஏழைக் குழந்தை தன்னந்தனியாக ஆற்றின் கரையிலே நிற்பதை அபரோ கவனித்தான்.

அவன் குழந்தையின் அருகில் சென்று அன்புடன், ''குழந்தாய்! இந்த நள்ளிரவிலே நீ எங்கே வந்தாய்? எங்கே நீ போக வேண்டும்?'' என்று கேட்டான். குழந்தை, தான் ஆற்றைக் கடந்து போக வேண்டும் என்று சொன்னது.

மறு விநாடியே அபரோ குழந்தையைத் தன் தோளிலே தூக்கி வைத்துக்கொண்டான். நதியைக் கடந்து போக ஆரம்பித்தான். குழந்தையைத் தூக்கிக்கொண்டு ஆற்றிலே நடக்க நடக்க, குழந்தையின் கனமும் கொஞ்சம் கொஞ்சமாக அதிகமாகியது. அபரோ ஆற்றின் மறு கரையை அடையும் தறுவாயில், குழந்தையின் கனத்தை அவனால் தாங்கக்கூட முடியவில்லை!

ஒரு வழியாக அபரோ மிகுந்த சிரமத்துடன் குழந்தையை மறு கரையிலே இறக்கி விட்டான். பிறகு வியப்புடன் அந்த அதிசயக் குழந்தையைப் பார்த்து, ''குழந்தாய், பார்ப்பதற்கோ உன்னுடைய உருவம் இவ்வளவு சிறியதாக இருக்கிறது! ஆனால் தூக்கினால் இந்தக் கனம் கனக்கிறாயே, என்னதான் விஷயம்?'' என்று கேட்டான்.

அந்த அதிசயக் குழந்தை பேசியது: ''நான் கனமாகத்தான் இருக்கிறேன். காரணம், நான் இந்த உலக மக்களின் பாவங்களையும் துன்பங்களையும் சுமந்து கொண்டிருக்கிறேன். **நான் தான் இயேசு கிறிஸ்து.** நீ ஏழை எளியவர்களுக்குத் தொண்டு செய்வதன் மூலம் என்னை வழிபட்டாய். அத்துடன் என்னை நோக்கிப் பிரார்த்தனைகளையும் செய்தாய். இந்த இரண்டையும் செய்த உன்னை நான் மிகவும் நேசிக்கிறேன். இனி உனது பெயர் கிறிஸ்தோபர் (Christopher) என்று இந்நிலவுலகிலே என்றென்றும் நிலைபெறுவதாகுக'' என்று சொல்லி மறைந்தது.

கிறிஸ்தோபர் ஆண்டவனின் தரிசனத்தால் ஆன்மீக வெள்ளத்தில் தோய்ந்தார். எப்போதும் போலவே, மக்களுக்குப் பணி செய்தும் ஆண்டவனைத் தொழுதும் வாழ்ந்து மறைந்தார்.

மாமுனிவர் கிறிஸ்தோபரின் வாழ்க்கை நமது அறிவுக் கண்களைத் திறக்கட்டும். உண்மையான ஆன்மீக நெறியில் செலுத்தட்டும். மக்களுக்குத் தொண்டு செய்வதையும், ஆண்டவனைத் தொழுவதையும், இரண்டு கண்களாக பாவித்து வாழ்பவர்கள் பாக்கியசாலிகள். இதையே இக்காலத்திற்கேற்ற கடவுள் வழிபாடாக சுவாமி விவேகானந்தர் போதித்தார். அதற்கும் மேலாக வாழ்ந்தும் காட்டினார். அன்பர் பணி செய்வோருக்கு இன்பநிலை வருவது நிச்சயமே. அதை நாம் செய்வோமா? செய்ய ஆண்டவனைப் பிரார்த்திப்போமாக.



# கடவுளையே நாடு

சுவாமி பிரம்மானந்தர்

ஒவ்வொருவரும் வேண்டுவது இன்பத்தைத் தான். யார்தான் துன்பத்தையும் துயரத்தையும் பெற விரும்புகிறார்கள்? ஆனால் அந்த இன்பம் எங்கிருந்து கிடைக்கும்? எல்லா இன்பங்களுக்கும் மூலமாக விளங்கும் பகவானைத் தூரத் தள்ளிவிட்டு, அநித்தியமான சில அற்ப விஷயங்களைப் பின்பற்றி ஓடினால், நிச்சயமாக இன்பம் கிடைக்காது.

அவர் பலவிதமான விளையாட்டுப் பொருள்களைத் தந்து, தம்மை மறக்கும்படி செய்திருக்கிறார். அந்த விளையாட்டுப் பொருள்களை எல்லாம் தூக்கி எறிந்துவிட்டு, அவரிடம் பிரார்த்தனை செய்யுங்கள். அவர் விரைந்து ஓடோடி வந்து உங்களைத் தூக்கி இடுப்பிலே வைத்துக் கொள்வார்.

விளையாட்டுப் பொருளை நாடினால் விளையாட்டுப் பொருள்தான் கிடைக்கும். கடவுளை நாடுவீர்களானால் அவரை அடைவீர்கள்— ஒன்று வேண்டுமானால் மற்றொன்றை விட வேண்டும்.

நீங்கள் விளையாட்டுப் பொருள்களைத்தான் போதுமான அளவுக்கும் பல தடவைகள் விளையாடியாயிற்றே—இந்தத் தடவை விளையாட்டுகளை விட்டுவிட்டு ஜகன்மாதாவை அழையுங்கள்.

நீங்கள் பார்த்ததில்லையா? எந்தக் குழந்தைக்கு விளையாட்டில் விருப்பமோ, அந்தக் குழந்தைக்குத் தாய் விளையாட்டுச் சாமான்கள் எதையாவது கொடுத்துத் தன்னை மறக்கும்படி செய்கிறாள். ஆனால் எந்த ஒரு குழந்தைக்கு விளையாட்டில் ஆசை இல்லையோ, அந்தக் குழந்தையைத் தாய் தன் அருகிலேயே வைத்துக் கொள்கிறாள்; இடுப்பில் தூக்கி வைத்துக்கொண்டு உலாவுகிறாள். தாயின் மடியில் இருக்கும் குழந்தைக்கு எவ்வளவு குஷி! எவ்வளவு ஆனந்தம்!! யார் தாயின் மடியில் இருக்கிறானோ அவனுக்குத்தான் அந்த மகிழ்ச்சி தெரியும்.

எந்தக் குழந்தை விளையாட்டில் மூழ்கித் தாயை மறந்து விடுகிறதோ, அதற்குத் தாயிடமிருந்து வெறும் விளையாட்டுச் சாமான்கள் மட்டுமே கிடைக்கிறது. மேலும் அந்த விளையாட்டுச் சாமான்களோ பல ஆபத்துக்களையும் விளைவிக்கிறது. ஒரு சமயம் கையிலிருந்து கீழே விழுந்து உடைந்து போகிறது. அல்லது ஒருவேளை அவைகளை வைத்துக்கொண்டு விளையாடும் பிள்ளைகளுக்கிடையில் சண்டை சச்சரவுகள் ஏற்பட்டு விடுகிறது. அதன் காரணமாக அடியும் உதையும் விழுகிறது. இதைப் போல பலவித கஷ்டங்களுக்கு உட்பட வேண்டியதாகிறது.



சுவாமி பிரம்மானந்தர்

ஆனால் எந்தக் குழந்தை தாயின் இடுப்பில் இருக்கிறதோ, அதற்கு இப்படிப்பட்ட வேண்டாத தொல்லைகள் எல்லாம் எதுவும் இல்லை. ''எனக்கு எப்போது என்னென்ன தேவையோ, அதையெல்லாம் அம்மாவே தருவாள்'' என்பதை அந்தக் குழந்தை உணர்ந்து எப்போதுமே மகிழ்ச்சியாக இருக்கிறது.

ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்ன மாந்தோப்புக் கதை மிக நல்ல கதை. 'நீ மாம்பழம் சாப்பிடுவதற்காக வந்திருக்கிறாய். அதை விட்டுவிட்டு-

மரத்தில் எத்தனை கிளை, எத்தனை இலை என்றெல்லாம் ஆராய்ந்து கொண்டிருப்பது எதற்காக? வயிறு நிறைய மாம்பழம் சாப்பிட்டுத் திருப்தி அடை'.

நீங்கள் பகவானை அடைவதற்காக உலகில் பிறந்திருக்கிறீர்கள். முதலில் அந்த இலட்சியத்தைச் சாதித்து பாக்கியசாலிகள் ஆகுங்கள். கடவுளைச் சாட்சாத்கரிக்கும் உங்கள் சொந்தப் பிரச்னையை முதலாவதாகக் கருதவும் தீர்க்கவும் செய்யுங்கள். உங்கள் வாழ்க்கைப் பிரயாணத்துக்கு வேண்டியது எதுவோ, அதை முதலில் தேடிக் கொள்ளுங்கள். நீங்கள் இங்கே வந்திருப்பது எதற்காக என்பதைத் தீர யோசித்துத் தெளியுங்கள். அந்த இலட்சியத்தை அடைவதற்காகவே கடுமையாகப் பாடுபட்டு உழையுங்கள். உழைத்து அமிருத குண்டத்தில் மூழ்கி அழியாத நிலையைப் பெறுங்கள். இரவும் பகலும் ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்யுங்கள்.

பகவானுடைய நாமஜபமும் சிந்தனையும் எந்த வகையில் செய்தபோதிலும் நன்மையைக் கொடுக்கும். எந்த நாமத்தைக் கொண்டு எந்த வடிவத்தில் பகவானை அழைப்பதால் உங்களுக்கு விருப்பம் ஏற்படுகிறதோ, அந்த நாமத்தைக் கொண்டே அதே வடிவத்தில் அவரிடம் சிரத்தையோடு பிரார்த்தனை செய்யுங்கள். அவ்விதம் செய்வதால் நிச்சயமாக அவரைத் தரிசிப்பீர்கள்.

''நாதா, சச்சிதானந்தத்தை அடையும் வழி எது?'' என்று பார்வதிதேவி ஒருமுறை சிவபெருமானிடம் கேட்டாள். ''நம்பிக்கை'' என்று சிவபெருமான் பதில் சொன்னார். உங்களுக்குச் சரியான வழி காட்டப்பட்டிருக்கிறது. ஆத்ம சாதனைகளாகிய அந்த வழியைச் சிரத்தையுடனும் பொறுமையுடனும் விடாமுயற்சியுடனும் பின்பற்றுங்கள். விலை மதிப்பிடவே இயலாத அரும்பொருள் உங்களுக்குக் கிடைத்திருக்கிறது—எழுந்து அதை உறுதியாகப் பற்றி நில்லுங்கள். பேணிப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

கடவுளின் இந்த வடிவத்தில் சாதனை செய்யட்டுமா, அல்லது அந்த வடிவத்தில் சாதனை செய்யட்டுமா என்பதைப் போன்ற விவகாரங்களிலேயே மூளையைக் குழப்பிக் கொண்டு இனி மேலும் காலத்தை வீணாக்காதீர்கள். அது உங்களுக்குப் பிடித்தமான எந்த வடிவத்தில் வேண்டுமானாலும் இருக்கட்டும். அவரைச் சிரத்தையுடன் அழைத்தால், நிச்சயமாகப் பயன் பெறுவீர்கள். ''இனிப்புப் பணியாரத்தை நேராகப் பிடித்துக் கடித்தாலும் சரி, கோணலாகப் பிடித்துக் கடித்தாலும் சரி; அது இனிப்பாகத்தான் இருக்கும்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம்.

நீங்களோ, கேட்பதை எல்லாம் கொடுக்கக் கூடிய கற்பக மரத்தின் அடியில் உட்கார்ந்திருப்பதைப் போல இருக்கிறீர்கள். எதை எல்லாம் கேட்கிறீர்களோ அவைகளை எல்லாம் பெறுவீர்கள்.

''நான் மிகவும் கெட்டிக்காரன்'' என்று நீங்களே நினைத்துக் கொள்ளாதீர்கள். பெரிய சாமர்த்தியசாலி என்று தனக்குத் தானே ஒருவன் நினைத்துக் கொள்வது நல்லதன்று. காக்கை, தானே மிகவும் சாமர்த்தியசாலி என்று நினைக்கிறது. ஆனால் மலத்தை உண்டு பிழைக்கிறது. இந்த உலகில் யார் அளவுக்கு மிஞ்சிச் சாமர்த்தியம் பண்ணத் தலைப்படுகிறார்களோ, அவர்கள் கடைசியில் ஏமாற்றப்பட்டே சாகிறார்கள்.

திடமான நம்பிக்கையுடன் தியானத்தில் மூழ்குங்கள்—ஆழ்ந்து மூழ்கிப் போங்கள்; தேடும் பொருளாகிய கடவுள் நிச்சயம் கிடைப்பார். சிறிதளவுக்கு ஆத்ம சாதனைகளைப் பழகி கடவுள் தரிசனம் கிடைக்கவில்லையே என்று நம்பிக்கையை இழந்து விடாதீர்கள். கடலில் கணக்கிடவே இயலாத வகையில் எண்ணற்ற முத்துக்களும் மணிகளும் இருக்கின்றன. ஒரு தடவை முழுவதாலேயே அவைகள் கைக்குக் கிடைக்கவில்லை என்பதால், கடலிலேயே முத்துகளும் மணிகளும் இல்லை என்று நினைத்து விடாதீர்கள்.

எனது குழந்தைகளே, மீண்டும் ஒருமுறை சொல்கிறேன்; உங்களுடைய குருவின் வார்த்தைகளில் உறுதியான நம்பிக்கை கொண்டிருங்கள். ஆழ்ந்த தியானத்தில் மூழ்க முயற்சி செய்யுங்கள். விரைவிலோ காலம் தாழ்ந்தோ, நீங்கள் நிச்சயமாகக் கடவுளின் தரிசனத்தைப் பெறுவீர்கள்.

''கடலில் ஒருவகைச் சிப்பி இருக்கிறது. அது எப்போதும் வாயைத் திறந்துகொண்டு தண்ணீரின் மேலே மிதந்து கொண்டிருக்கும்.

ஆனால் சுவாதி நட்சத்திரம் வானத்தின் உச்சியில் இருக்கும்போது, ஒரு துளி மழைத் தண்ணீர் அந்தச் சிப்பியின் வாயில் விழ நேர்ந்தால், உடனே ஒரேயடியாகத் தண்ணீருக்குள் கீழே அமிழ்ந்து சென்றுவிடும். அதன்பிறகு அது மேலே வருவதே இல்லை. மழைத்துளி நாளடைவில் ஒரு நல்ல முத்தாக மாறி விடுகிறது'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம்.

நீங்களும் குருவின் கிருபை மூலமாக எந்த ஒரு துளி நீரைப் பெற்றிருக்கிறீர்களோ, அதைக் கொண்டு ஆத்ம சாதனைகளாகிய தண்ணீரில் ஆழ்ந்து மூழ்கி விடுங்கள். இனி, வேறு திசைகள் எதிலுமே பார்வையைச் செலுத்தாதீர்கள்.

உறுதியாகவும் பொறுமையாகவும் தைரியத்தோடு சாதனைகளைச் செய்து கொண்டிருங்கள். உங்கள் மனம் கலக்கம் அடைய அனுமதிக்காதீர்கள். தக்க சமயத்தில் ஆண்டவனின் திருவருள் நிச்சயம் உங்கள் மீது உண்டாகும்.

நீ ஒரு பெரிய மனிதரைப் பார்க்க விரும்புவதாக வைத்துக் கொள்வோம். முதலாவதாக நீ, அவருடைய வேலைக்காரர்கள், காவற்காரர்கள் ஆகியவர்களோடு பழகி அவர்களைத் திருப்தி செய்ய வேண்டியிருக்கும். அதேபோல, கடவுளைத் தரிசிக்க வேண்டுமானாலும், மகான்களின் சத்சங்கத்தைப் நாடுவதையும் பலவித ஆத்ம சாதனைகளைப் பழகுவதையும் நீ மேற்கொள்ள வேண்டும்.

கடவுளைத் தன் சொந்தத்திலும் சொந்தமாக மிக நெருங்கியவராக பாவித்து, அவருடைய தரிசனம் பெறுவதற்காக, அவருடைய கிருபையைப் பெறுவதற்காக, ஒரு குழந்தையைப் போல வருந்தி அழ வேண்டும். தனது குழந்தையின் அழுகையைக் கேட்டும் தாய் சும்மா இருக்க முடியுமா? கடவுளும் அதுபோலவே ஓடோடி வருகிறார்; தரிசனம் தராமல் அவரால் தரித்திருக்க முடியாது.

தூக்கத்தை உதறித் தள்ளுங்கள். எழுந்து நின்று உறுதியுடன் முயற்சி செய்து கடவுளை அடையுங்கள். மனதை, மாலுமியின் திசை காட்டும் கருவியின் முள்ளைப் போல, ஒருமுகப்படுத்த வேண்டும். கப்பல் எந்தத் திசையில் போனாலும், முள் மட்டும் எப்போதும் வடக்குத் திசையையே பார்த்துக் கொண்டிருக்கும். ஆகவேதான் கப்பல் திசை தவறிப் போவதில்லை.

அதேபோல, மனிதனுடைய மனம் எப்போதும் ஈசுவரனை நோக்கியே நிலைத்து நின்றால், அதன்பிறகு எந்தவிதமான பயமும் இருக்க இடமில்லை. சூழ்நிலை காரணமாக, ஆயிரம் கெட்டவர்களுடைய மத்தியில் அவன் இருக்க நேரிட்டாலும்கூட, அவனுடைய பக்தியும் கடவுள் நம்பிக்கையும் குறைந்து போவதில்லை.

கடவுளைப் பற்றிய பேச்செடுத்தால் போதும்; அவன் அந்தக் கடவுள் அன்பிலேயே உன்மத்தன் ஆகிவிடுகிறான். அது எதைப்போல தெரியுமா? சக்கிமுக்கிக் கல்லானது நூறு வருஷம் தண்ணீருக்குள்ளேயே இருந்தாலும், எப்படி அதனுள்ளே இருக்கும் நெருப்பு குறைந்து கெட்டுப் போவதில்லையோ, பஞ்சை வைத்து இரும்பினால் தட்டிய மாத்திரத்திலேயே நெருப்பு வெளிப்பட்டு விடுகிறதோ, அதைப் போன்ற நிலையிலேயே பக்தனும் இருப்பான்.

பகவானுடைய தரிசனத்தைப் பெற்று யார் பாக்கியசாலிகளானார்களோ, அவர்களுடைய மனம் எப்போதும் கடவுளிடமே நிலைத்திருக்கிறது. கடவுளைப் பற்றிய பேச்சும், பக்தர்கள், சாதுக்கள் ஆகியவர்களுடைய சங்கத்தையும் தவிர, வேறு எதுவும் அவர்களுக்குப் பிடிக்காது. அவர்கள் மற்ற உலகப் பொருள்கள் எதன் மீதும் மனம் வைப்பதில்லை.

அவர்கள், புயற்காற்றில் இங்கும் அங்கும் அலைகழிக்கப்படும் காய்ந்த சருகு போல கடவுளின் இச்சைக்குட்பட்டு இருப்பார்கள்—சுய இச்சையோ நான் என்னும் அபிமானமோ, ஒன்றும் இல்லாமல் கடவுள் எந்த நிலையில் வைக்கிறாரோ அதில் திருப்தியுடன் வாழ்கிறார்கள்.

காற்று, இலையை எந்தத் திசையில் அடித்துக் கொண்டு போனாலும் அது போகும். அதுபோல கடவுளின் இச்சைக்கே உங்களை ஒப்படைத்துவிட்டு உலகில் வாழுங்கள். பிறகு நீங்கள் சச்சிதானந்த சாகரத்திலும் மூழ்கிப் போக முடியும்.

உங்களுடைய மனம் இப்போது பரிசுத்தமாக இருக்கிறது; ஆசைகள் படியவில்லை; குற்றம் குறைகள் இல்லாமல் இருக்கிறது. இதேநிலையில் உங்கள் மனதை எப்போதும்

வைத்திருக்க முயற்சி செய்யுங்கள். உங்களுடைய இந்த அருமையான சுபாவம், எதன் மூலம் நாளுக்குநாள் முற்றிப் பழுக்க வல்லதோ, அந்த வழிகளைப் பின்பற்ற முயற்சி செய்யுங்கள்.

ஒரு முறை வேறு வழியில் மனம் திசை மாறி விட்டால், பிறகு திருப்புவதற்கு உபாயமில்லை. ஆசைகள் படியாத மனம் உலர்ந்த தீக்குச்சியைப் போன்றது. ஒரு தரம் கிழித்தால், 'கப்' என்று உடனே பற்றி எரியும். ஆனால் அதே குச்சி நனைந்து ஈரமாகிவிட்டாலோ, ஒன்றுக்கும் பயன்படாமல் வீணாகப் போகிறது; தேய்த்துத் தேய்த்துக் குச்சி ஒடிந்து போகும்; பற்றியும் எரியாது. அதுபோலவே உங்கள் மனம் கடவுளைத் தவிர்த்து வேறு வழியில் படிந்து விட்டால், மீண்டும் அதை முன்பு போலவே தூய்மையாக வைத்திருக்கச் செய்வதில் மிகுந்த சிரமம் இருப்பதைக் காண்பீர்கள்.





# ஞானம்

எப்படி ஒளியின் உதவி இல்லாமல் ஒரு பொருள் ஒருபோதும் பார்க்கப்படுவதில்லையோ, அப்படியே மனதில் ஆராய்ச்சி இல்லாமல் எதனாலும் ஞானம் அடையப்படுவதில்லை.

அஞ்ஞானத்தால் தோன்றிய அனைத்தும் ஞானம் உதித்தவுடன் மறைந்து போகிறது.

ஃ ஃ ஃ

கண்ணாடி போன்ற மனதானது பரிசுத்தமானால் அதில் ஞானம் தானே விளங்கும். ஆகையால் மனதைப் பரிசுத்தமாக்குவதில் கவனம் செலுத்த வேண்டும்.

ஃ ஃ ஃ

தன்னாலோ பிறராலோ ஆத்மாவைக் கொள்ளவும் முடியாது, தள்ளவும் முடியாது; அதுவும் எதையும் கொள்வதும் இல்லை, தள்ளுவதும் இல்லை. இதுதான் உண்மையான ஞானம்.

ஃ ஃ ஃ

வேதங்களிலும் தேவதைகளிடமும் உறையும் உன்னதமான ரகசியம் ஞானமே. அது தான் பரிசுத்தம் அளிப்பவைகளுள் தலைசிறந்தது.

ஃ ஃ ஃ

சிறந்ததும் ரகசியமானதுமாகிய ஞானத்தைத் தன்னடக்கம் இல்லாதவனுக்கு அளிக்கக் கூடாது. வைராக்கியம் உடையவனும் குருவின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பவனுமாகிய சீடனுக்குத்தான் அளிக்க வேண்டும்.

ஸமமானதும் சாந்தமானதும் சச்சிதானந்த வடிவினதுமான பிரம்மமே நான், அசத்தான உடல் அல்லன்—என்று இவ்விதம் அறிந்து கொள்வதுதான் ஞானம் என்று புத்திமான்களால் கூறப்படுகிறது.

—ஸ்ரீ ஆதிசங்கரர்



# எளிய செயல்

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

இறைவனுடைய திருவருளைப் பெற வேண்டும் என்ற ஆசை பலருக்கு இருப்பது போலத் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் நெஞ்சார அதற்கு ஆசைப்படுகிறவர்கள் மிகமிகக் குறைவு. அவர்களுக்குக் கண் முன்னால் உள்ள பிரபஞ்சப் பொருள்களின் மேல்தான் ஆசை அதிகமாக இருக்கிறது. இந்திரியங்களுக்குச் சுகம் தருகின்ற பொருள்களில்தான் அவர்களுடைய நாட்டம் செல்கிறது. 'அவன் விருந்து உண்ணுகிறான்; நாமும் உண்ண வேண்டும். அவன் பட்டுக் கட்டுகிறான்; நாமும் கட்ட வேண்டும். அவன் மனைவி மக்களுடன் வாழ்கிறான்; நாமும் வாழ வேண்டும்' என்பன போன்ற சிந்தனையே மக்களிடம் இருக்கிறது. அதிகமாகப் பொருளை ஈட்டி, அந்தப் பொருளால் அதிகமான பண்டங்களைச் சேமித்து, அதிகமான வசதிகளை அனுபவிக்க வேண்டும் என்றே யாவரும் முயல்கிறார்கள். அவர்கள் உள்ளத்தில் இந்த ஆசையே நிரம்ப இருக்கிறது.

இந்த உலகியல் இன்பத்தை நுகர்வதற்காக மனிதன் ஒவ்வொரு கணமும் உழைத்துக் கொண்டே இருக்கிறான். தன் கருவி கரணங்களையும், அறிவையும், பெற்ற பொருளையும், பலவகையில் ஈடுபடுத்தி இந்திரிய சுகத்தைத் தேடி அலைந்துகொண்டே இருக்கிறான். பிறவி தோறும் அலைந்துகொண்டே இருக்கிறான்.

''உள்ளங்கால் வெள்ளெலும்பு
தேய ஒருகோடி
வெள்ளங்கா லம்திரிந்து
விட்டேனே''

என்று பட்டினத்தார் புலம்புகிறார்.

உலகியல் இன்பங்களைப் பெறுவதற்கு எத்தனை முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது! எத்தனை காலம் செலவிட வேண்டியிருக்கிறது! அப்படிச் செய்தாலாவது நினைத்தபடி இன்பம் கிடைக்கிறதா? இல்லையே! ஒரு கவளம் சோறு பெறுவதற்கு எவ்வளவு உழைப்பை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. வீட்டுக்கு ஒரு கலம் நெல் வரவேண்டுமானால், வயலில் விதைப்பது முதல் அறுவடை வரையில் பல பேர் சேர்ந்து பலபல வகையில் வேலை செய்ய வேண்டும். இப்படியே உலகியல் இன்பத்துக்காக மனிதர்கள் கூட்டம் கூட்டமாகக் கூடிக் கொண்டு எத்தனையோ பாடுபடுகிறார்கள்.

நாம் உடை உடுத்துகிறோம். நாமே ஆடையை எடுத்து நம் கைகளால் அணிந்து கொள்கிறோம். இது மிகவும் எளிய செயலாகத் தோன்றுகிறது. ஆனால் அந்த ஆடை நமக்கு



நடராஜர்

எப்படிக் கிடைத்தது? பருத்திச் செடியை வளர்ப்பது முதல் ஜவுளிக் கடையில் போய் அதை வாங்குகிற வரைக்கும் அந்த ஆடை எத்தனை பேரை வேலை வாங்கியிருக்கிறது! ஆடை நம்முடைய உடம்பிலிருந்து உண்டாவதில்லையே! கையை நீட்டினால் அது வந்து விழுந்து விடாதே!

இறைவன் திருவருளைப் பெறுவதற்கு என்ன என்ன வேண்டும்? எத்தனை பேருடைய உதவி வேண்டும்? ஒன்றுமே வேண்டாம், யாருடைய உதவியும் வேண்டியதில்லை. வெளியிலிருந்து எந்தப் பண்டத்தையும் வாங்கி வர வேண்டாம். இறைவனை எப்போதும் நினைத்தபடியே வாழ்ந்தால் அவன் திருவருளைப் பெற்றுவிடலாம்.

இறைவனைச் சிந்தையில் நினைந்து வாழ்வதற்குப் புதியதாக மனத்தைச் சம்பாதிக்க வேண்டாம். நம்மிடமே அது இருக்கிறது. அதற்குப் புதியதாக ஆடை அணிகளை அணிய வேண்டாம். நினைப்பது என்ற காரியம் மிகமிக எளிது. உடம்பினால் ஏதேனும் வேலை செய்ய வேண்டுமானால் இடம்விட்டு இடம் போக வேண்டும்; எழ வேண்டும்; நடக்க வேண்டும்; நிமிர வேண்டும்; குனிய வேண்டும்; கை கால்களை அசைக்க வேண்டும். ஆனால் மனத்தினால்

ஒன்றை நினைப்பதற்கு இத்தகைய சிரமங்கள் தேவை இல்லை. இருந்தபடியே நினைக்கலாம்.

நினைக்கவேண்டிய பொருள் எது? இறைவனை நினைக்க வேண்டும். அவனை எங்காவது பிரபஞ்சத்தைச் சுற்றித் தேடிக் கண்டுபிடித்து நினைக்க வேண்டுமா? அவனை எங்கிருந்தாலும், எப்படி இருந்தாலும், எந்தக் காலத்திலும் நினைக்கலாம். அதற்காகத் தனியான முயற்சிகளைச் செய்ய வேண்டியதில்லை.

யாரேனும் ஒரு பெரிய மனிதரை நம் வீட்டுக்கு அழைக்க எண்ணுகிறோம். அவருக்கு வரவேற்பு அளித்துத் தக்க ஆசனத்தில் இருத்தி உபசாரம் செய்ய வேண்டும். அதற்காக வீட்டைச் சுத்தப்படுத்திக் கோலம் போடுகிறோம். இரவலாகவாவது ஏதேனும் விரிப்பை வாங்கி வந்து விரிக்கிறோம். பலகை போடுகிறோம். ஊதுவத்தி கொளுத்தி வைக்கிறோம். சிற்றுண்டி வழங்க ஏற்பாடு செய்கிறோம்.

நம் மனத்தில் இறைவனை நினைக்க, அவனை நம் சிந்தையுள்ளே அழைத்து வர, இப்படியெல்லாம் முன் ஏற்பாடு ஏதும் செய்ய வேண்டாம். நம் சிந்தையை அலங்கரிக்க வேண்டாம். இறைவன், 'நம்மை யார் எப்போது அழைக்கிறார்?' என்று காத்துக் கிடக்கிறான். நம் மனமாகிய வீட்டுக்குள் நுழைய வேண்டுமென்று அதற்கு ஏற்றபடி கோலம் கொண்டிருக்கிறான். அவன் பரம சூட்சுமமான பரம் பொருளானாலும், நம் சிந்தையிலே குடிகொள்ள வேண்டி வடிவங்களை எடுத்து வருகிறான். அவனுடைய திருமேனி பலவானாலும் நமக்கு எந்த வடிவம் மனம் கவருவதாக இருக்கிறதோ, அந்த வடிவத்தை நினைத்தால், அப்படியே வந்து நம் சிந்தையுள் குடி புகுவான்.

இவ்வளவு எளிதாக அவன் வரும்போது, நாம் எளிதில் எந்த முயற்சியும் இன்றி வெறுமனே நினைத்தால் போதும் என்ற நிலை இருக்கும்போது, நாம் சும்மா இருக்கலாமா? அவனை நினைந்து, சிந்தையில் எப்போதும் அவன் திருக்கோலத்தை வைத்து, வாழும் திறம் எளிது. அதை மக்கள் தெரிந்து கொள்ளாமல் வீணே வாழ்நாளைக் கழிக்கிறார்களே!

இவ்வாறு உலகத்தவரை எண்ணி இரங்குகிறார் காரைக்காலம்மையார். அவர்களைப் பார்த்தே சொல்லத் தொடங்குகிறார்.

'இந்தக் காரியம் மிக எளியதாயிற்றே! இதை நீங்கள் செய்ய எந்தப் பெரு முயற்சியும் மேற்கொள்ளத் தேவை இல்லையே!' என்று தொடங்குகிறார்.

எடுத்த எடுப்பிலே, 'இது எளிய காரியம் அல்லவா?' என்று அவர் கேட்கும்போது நமக்கு அதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் மூள்கிறது.

**எளியது இது அன்றே?**

அடுத்தபடி நம்மைப் பார்த்து இரங்குகிறார் அம்மையார். 'எந்தச் செல்வத்தைப் பெற வேண்டுமோ அதைப் பெறாமல் உலகியற் பொருள்களைப் பெற்றுக்கொண்டு, நாம் இது பெற்றோம் அது பெற்றோம் என்று பெருமைப் பட்டுக் கொள்கிறீர்களே! அந்தச் செல்வமெல்லாம் நிலைத்து நிற்குமா? இறைவனுடைய அருட் செல்வமல்லவா நிலையான செல்வம்? அதைப் பெறாதவர்கள் எவ்வளவு உலகியற் செல்வங்களை உடையவர்களாக இருந்தாலும் ஏழைகளே அல்லவா? அந்த அருட் செல்வத்தைப் பெறாமல் உள்ள ஏழைகளே!' என்கிறார்.

**ஏழைகாள்!**

'உலகியற் பொருளைப் பற்றிக் கொண்டு அதை யாருக்கும் சிறிதளவும் கொடுக்காமல், இதுவே நமக்கு இன்பந்தருவது என்று எண்ணியிருக்கிறீர்களே! பிறருக்கு அளிக்காமல் பற்றிக் கொண்டவர்களே' என்று அடுத்தபடி சொல்கிறார்.

**யாதும் அளியீர்!**

'மனிதன் அறிவிற் சிறந்தவன். பகுத்துப் பார்க்கும் ஆறாவது அறிவு பெற்றவன். அந்த அறிவை விளக்கப்படுத்தி மெய்ஞ்ஞானத்தைப் பெற வேண்டும். இறைவனை அறியும் அறிவே மெய்யறிவு. அந்தத் துறையில் ஈடுபடுபவன் தான் மெய்யறிவு வாய்ந்தவன். உங்களிடம் அந்த அறிவு இல்லையே!'

**அறிவிலீர்!**

'உங்களைப் பார்த்தால் எனக்கு இரக்கம் உண்டாகிறது. ஐயோ பாவம் என்று இருக்கிறது.'

**ஆவா!**

'நீங்கள் உண்மையான செல்வர்களாக, மெய்யறிவுடையவர்களாக வாழ வேண்டுமா?

நான் வழி சொல்கிறேன். மிகவும் எளிய வழி. இறைவனைச் சிந்தையுள்ளே நினைந்து வாழுங்கள். அவனை நினைக்க முடியாதென்று எண்ணாதீர்கள். அவன் அழகிய திருக்கோலத்தோடு விளங்குகிறான். எங்கே போய்த் தங்கலாம் என்று உழன்று கொண்டே இருக்கிறான்.'

'அவன் எப்படி இருப்பான்? அவன் கோலத்தை எவ்வாறு நினைப்பது?' என்று நாம் கேட்கிறோம்.

அம்மையார் சொல்கிறார்: 'அவன் திருக்கழுத்து நீலமணி போல ஒளிவிட்டிருக்கும். அவன் நமக்கெல்லாம் தகப்பன். அவனைச் சேர்ந்தவர்கள் எவ்வளவு கொடியவர்களானாலும் நல்லவர்கள் ஆகிவிடுவார்கள். அவன் அணிந்திருக்கும் பாம்பே இதைத் தெரிவிக்கும். ஒளிகொள் மிடற்றுடன் அராவைப் பூண்டு கொண்டு எந்தை உழன்று கொண்டிருக்கிறான். நம்மை வரவேற்கச் சிந்தையென்னும் உள் வாயிலைத் திறந்துகொண்டு யார் இருக்கிறார் என்று தேடி அலைந்து கொண்டிருக்கிறான்.'

**ஒளிகொள் மிடற்று**
**எந்தை, அராப்பூண்டு உழலும் எம்மானை.**

'அத்தகைய பெருமானை உள்ளத்தினுள்ளே அந்தரங்க சுத்தியோடு, அன்போடு வைத்து, அவனுடைய ஆதனமாகச் சிந்தையை ஆக்கி, அத்தகைய சிந்தையை உடையவராய் வாழும் திறமை மிக அரிது என்று எண்ண வேண்டாம். அது மிக எளிது. வெறும் நினைப்பளவிலே சித்திப்பது.'

**உள் நினைந்த**
**சிந்தையராய் வாழும் திறம்.**

விமானத்தில் ஏறாமல் டிக்கட் வாங்காமல் நினைத்த மாத்திரத்தில் அமெரிக்காவில் போய் நிற்க முடிகிறதே; எண்ணத்தில்தான். எவ்வளவு எளிது? அப்படி எண்ணினால் அமெரிக்காவை அடைந்த சுகம் வராது. எம்பெருமானை நினைப்பது அப்படி அன்று. அவனை நினைப்பதுவே செய்ய வேண்டிய காரியம். அதனால் அருட் செல்வராகலாம்; மெய்ஞ்ஞானி ஆகலாம். வெறும் நினைப்பே இதைச் செய்யுமானால் அது மிகமிக எளிதுதானே? இதைத்தான் அம்மையார் சொல்கிறார்.

**எளியது இது அன்றே? ஏழைகாள், யாதும்**
**அளியீர், அறிவிலீர், ஆவா!—ஒளிகொள்**
**மிடற்று**
**எந்தை, அராப் பூண்டு உழலும் எம்மானை**
**உள்நினைந்த**
**சிந்தையராய் வாழும் திறம்.**

[அருட் செல்வம் பெறாத வறியவர்களே, சிறிதும் பிறருக்குக் கொடுக்காதவர்களே, அறிவில்லாதர்களே! அந்தோ! மணியின் ஒளியைக் கொண்ட திருக்கழுத்தையுடைய எந்தையும், அராவை அணிகலனாகப் பூண்டு அன்பர்களைத் தேடித் திரியும் எம்மானுமாகிய பரமேசுவரனை அந்தரங்கத்திலே நினைக்கும் உள்ளம் உடையவர்களாக வாழும் திறமையாகிய இது எளிது அல்லவா?

திறம் இது எளிது அன்றே என்று கூட்டிப் பொருள் கொள்க. அன்றே—அல்லவா, ஏ:வினா. பின்னாலே அறிவிலீர் என்று வருதலின், ஏழைகாள் என்பதற்கு அருட் செல்வத்தைப் பெறாத வறியவர்களே என்று பொருள் கொள்ள வேண்டும். யாதும்—சிறிதும். அளியீர் என்பதற்கு இரங்கத் தக்கவர்களே என்று பொருள் கொள்ளின், யாதும் என்பது எதனோடும் சேராது நிற்கும். ஆவா—அந்தோ; இரக்கக் குறிப்பு. ஒளி—நீலமணியின் நிறம்; ஆலகாலத்தைக் கொண்டதாதலின் நீல நிறமுடையதாயிற்று. அம்மையார் நீலகண்டத்தைப் பலகாலும் நினைப்பவர். உழலும்—திரியும்; சஞ்சாரம் செய்யும். அடியார் யாரேனும் உள்ளாரா என்று எப்போதும் தேடித் திரிவது இறைவன் கருணைச் செயல்.]

இறைவனை அந்தரங்க சுத்தியோடு தியானம் செய்து வாழ்ந்தால் அவன் திருவருளைப் பெறலாம் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் **46**-ஆவது பாட்டு இது.



**புண்ணியவான்கள் வசம் இருக்கும் பொருள் போல, இறைவன் அனைவருக்கும் பயன் தருபவன்; பொய்யர் உள்ளத்தில் ஒருபோதும் பொருந்தாதவன்.**

**—வடலூர் வள்ளலார்**

# துளசிதாசர் காணும் இராமபிரான்

**சுவாமி ஆத்மானந்தர்**

சொல்லின் செல்வன் அனுமன், அன்னை சீதாதேவியைக் கண்டு மகிழ்ந்து இராமபிரானைக் காணத் துடித்துக்கொண்டு வரும்போதே, 'கண்டேன் சீதையை' என்று அனைவரையும் மகிழ்வித்தான்.

அதைத் தொடர்ந்து இலங்கைக்கு அணை கட்டும் வேலை தொடங்கியது. ஒருவிதமாக அணையைக் கட்டி முடித்த பிறகு ஜாம்பவான் இராமனைக் கண்டு வணங்கிக் கூறினுன்:



''பிரபோ! அணையை வானரங்களின் உதவியைக் கொண்டு கட்டி முடித்து விட்டேன். ஆனுல் போதுமான அளவுக்கு அணை அகலமாக இல்லை. ஆகவே நமது படையினரை வரிசையில் நிற்க வைத்தே அனுப்ப வேண்டியிருக்கும்.''

அதைக் கேட்டு அண்ணல் ராமர் சிறிதும் தயக்கம் கொள்ளவில்லை. அவர், ''எங்கே, என்னுடன் வா. அணையைப் பார்வையிடலாம்'' என்று ஜாம்பவானையும் தன்னுடன் அழைத்துச் சென்ருர்.

சமுத்திரத்தில் வாழும் எண்ணற்ற உயிர் இனங்கள் இராமபிரானைத் தரிசிக்கும் ஆவலில் கடல் மட்டத்துக்கு வரலாயின. அவைகளுள் சில, பல மைல் தூரம் அகலமுடையவைகளாக இருந்தன.

ஜாம்பவானை அண்ணல் இராமர் பொருள் பொதிந்த பார்வை பார்த்தார். ஜாம்பவான்

**ஒரு சிறிய நிகழ்ச்சியின் மூலம் ஞான, கர்ம, பக்தி யோகங்கள் விளங்கப்படுகின்றன.**

அப்போதும் அண்ணலின் அருமையை உணராமல், ''பிரபோ! ஜலஜந்துக்கள் தங்களைத் தரிசிப்பதற்காக இப்போது மேலே வந்துள்ளன. ஆதலால்தான் நீர்ப்பரப்பே கண்ணுக்குத் தெரியவில்லை. அவைகளின் மீது கால் வைத்தால் அவை உள்ளே சென்றுவிடும். படையினர் சமுத்திரத்தில் மூழ்க வேண்டியதுதான்'' என்று சொன்னுர். ஜலஜந்துக்களோ, கண் இமைத்தால் அந்த சமயத்தில் ராமபிரானின் தரிசனம் போய்விடுமோ என்று ஐயுற்றுக் கண் இமைக்காமலும், அசைந்தால் கண் இமைக்கும் என்று அசையாமலும், பக்திப் பெருக்குடன் கடல் மட்டத்திலேயே இருந்தது இருந்தபடியே இருந்தன.

இராமர் ஜாம்பவானிடம், ''எங்கே, நீ விரும்பியபடியே பெரிய கல்லை வேண்டுமானுலும் போட்டு, உயிரினங்கள் தண்ணீருக்கு உள்ளே போய்விடுகின்றனவா என்று பரிசோதித்துப் பார்'' என்ருர். ஜாம்பவானுக்கு அப்போதுதான் சிறிது புரிய ஆரம்பித்தது. உடனே படையினருக்கு அக்கரைச் செல்லுமாறு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. சிலர் வான் வழியே மறுகரையை சென்றடைந்தனர். மற்றும் சிலர் கட்டப்பட்ட அணையின் உதவியால் அக்கரை சேர்ந்தனர். மற்றவர்கள் ஜலஜந்துக்களின் மீதே நடந்து சென்று இலங்கையை அடைந்தனர். இராமருக்கு அணைகட்டவும் பிறர் உதவி தேவையா? ஜாம்பவான் எல்லாவற்றையும் புரிந்து கொண்டார்.

இதிலிருந்து அறிவது யாது? வான் வழியே சென்றவர் ஞான யோகத்தைப் பின்பற்றுபவர். அணையின் மீது சென்றவர் கர்ம யோகத்தைப் பின்பற்றுபவர். ஜலஜந்துக்களின் மீது சென்றவர் பக்தி யோகத்தைப் பின்பற்றுபவர். இறைவனின் திருவருளால் பக்தி மார்க்கத்தின் மூலம் ஆயிரமாயிரம் மக்கள் மிக எளிதாக முக்தியாகிய கரையை அடைகிருர்கள்.*

---

*சுவாமி ஆத்மானந்தர், மயிலாப்பூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் நிகழ்த்திய துளசி ராமாயணத் தொடர் சொற்பொழிவிலிருந்து ஓர் அன்பர் எழுதியது.



இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ,
யாதாகுமோ அறிகிலேன்.

—தாயுமானவர்

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

'எழுமின், விழிமின், குறிசாரும் வரை நில்லாது செல்மின்!'

தொகுதி 57 அநல ஷூ தை முதல் மார்கழி முடிய

1977




ஆசிரியர்: சுவாமி சித்கனனந்தர்
துணை ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
11, ராமகிருஷ்ண மடம் ரோடு
மயிலாப்பூர்
சென்னை 600 004

## பொருளடக்கம்

(அகர வரிசை)

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்—1977



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

## 1977 டிசம்பர் மாத நிகழ்ச்சிகள்

**இந்திய தத்துவஞானம் தொடர் சொற்பொழிவு:**

| | |
|---|---|
| | **யோக தர்சனம்** |
| *18–12–77 ஞாயிறு* | *தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்* |
| *மாலை 4.30 முதல் 6.30 வரை* | *பேசுவோர்: டாக்டர் என். வீழிநாதன் (தமிழ்)* |
| | *டாக்டர் ஆர். பாலசுப்பிரமணியம் (ஆங்கிலம்)* |
| **சத் சங்கம்:** ஞாயிறுதோறும் | மாலை 4 மணி முதல் 8 மணி வரை |
| *மாலை 4 முதல் 4.20 வரை* | *ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (11-12-77)* |
| | *ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (4-12-77 & 25-12-77)* |
| *மாலை 4.20 முதல் 4.30 வரை* | தியானம் |
| *மாலை 4.30 முதல் 5.30 வரை* | சொற்பொழிவு (தமிழ்) |
| | *1.* **ஸ்ரீமத் பாகவதம்**—திரு 'அண்ணு' சுப்ரமண்யம் *(4-12-77)* |
| | *2.* **ஸ்ரீ ஆதிசங்கரரின் மாயபஞ்சகம்**—டாக்டர் ஆர். பாலசுப்பிரமண்யன் *(11-12-77)* |
| | *3.* **ஸ்ரீமத் ராமாயணம்**—டாக்டர் என். வீழிநாதன் *(25-12-77)* |
| *மாலை 5.35 முதல் 6.30 வரை* | சொற்பொழிவு (ஆங்கிலம்) |
| | *1.* **பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்**—சுவாமி தபஸ்யானந்தர் *(4-12-77 & 11-12-77)* |
| | *2.* **ஸ்ரீமத் பகவத்கீதை**—சுவாமி கபீரானந்தர் *(25-12-77)* |
| **சிறப்புச் சொற்பொழிவுகள்:** | *1.* **இராமாயணத்தில் ஆராய்ச்சி** —திரு பி. இராமகிருஷ்ணன் *(3-12-77)* |
| சனிக்கிழமைகளில் | *2.* **நாராயணீயம்**—திரு க. கோதண்டராமன் *(10-12-77)* |
| மாலை 5.45 மணிக்கு | *3.* **ஈசாவாஸ்ய உபநிஷதம்**—சுவாமி கிர்த்திதானந்தர் *(17-12-77 & 31-12-77)* |

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்**—*(மாலை 5-30)*

| | |
|---|---|
| திங்கள்: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத் பகவத் கீதை**—சுவாமி கோலோகானந்தர் |
| செவ்வாய்: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்**—சுவாமி கபீரானந்தர் |
| புதன்: | (தமிழ்) **மகாபாரதம்**—திரு 'அண்ணு' சுப்ரமண்யம் |
| வியாழன்: | (தெலுங்கு) **தியாகராஜர்**—சுவாமி சுவாத்மானந்தர் |
| வெள்ளி: | (தமிழ்) **ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்** —பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா |
| வெள்ளி: | (ஆங்) **ஸ்ரீமத் பகவத்கீதை** மாலை 6.30–சுவாமி கோலோகானந்தர் (ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம், 18, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி.) |
| **விசேஷ தினங்கள்:** | அந்தர் யோகம் (சாதனை தினம்)—ஞாயிறு (25-12-77) |
| *24-12-77 சனிக்கிழமை:* | கிறிஸ்து ஜயந்தி விழா (மாலை 7 மணிக்கு) |
| | 1. பைபிள் படித்தல் |
| | 2. **கிறிஸ்மஸ்:** பேசுபவர்: Rev. Fr. ராயப்பர் அருளப்பா ஆர்ச்பிஷப், சென்னை |
| *18-12-77 ஞாயிறு:* | **சுவாமி பிரேமானந்தர் ஜயந்தி** |
| | *ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்:* **ஏகாதசி தினங்களில்** ஆரதிக்குப் பிறகு *(7-12-77 & 21-12-77)* |

*அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.*

தலைவர்,
**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**

தொலைபேசி: **71231**